


பிப்ரவரி] சமய பாட போதனைத் திங்களிதழ் [1976



உ

திருச்சிற்றம்பலம்.

மண்ணில் நல்லவண்ணம்
வாழலாம் வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு
யாதுமோர் குறைவிலை
கண்ணில் நல்லஃதுறும்
கழுமல வளநகர்
பெண்ணில் நல்லாளொடும்
பெருந்தகை யிருந்ததே.

—திருஞானசம்பந்தர்



திருவள்ளுவர் ஆண்டு 2007 மாசித் திங்கள்.

தமிழ்நாடு தெய்விகப் பேரவை
9, மகாராஜா சூரியராவ் சாலை
சென்னை-600018,

# குறள் நூறு

பொருளுரை :

தவத்திரு குன்றக்குடி அடிகளார்

9. பெறும்அவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. 61.

பெறத் தகுந்த பேறுகளில் அறிவார்ந்த உணர்விற் பெறும் மக்கட் பேறே சிறந்தது. மற்றப் பேறுகள் நம்மால் மதிக்கத்தக்கன அல்ல.

பொருள் :

நல்லறிவு உணர்விற்பெறும் மக்கட்பேறன்றி, பெறக்கூடிய பெரும் பேறு வேறேதுமில்லை.

10. அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்ககு
என்போ டியைந்த தொடர்பு. 73.

ஆருயிருக்கு, எலும்பொடு கூடிய உடல் இயைந்திருப்பது, அன்பொடு பொருந்தி வாழும் வழக்கத்திற்கே.

பொருள் :

அன்பு, உயிர்க்குப் புதியதன்று; அன்பு செய்தல் உயிரின் வழக்கம். அவ்வழக்கத்தைச் செயல் முறைப்படுத்தவே உடம்பொடு உயிர் கூடிற்று.

11. வித்தும் இடம்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85.

விருந்தோம்பி எஞ்சியதை உண்ணும் இயல்புடையவன் நிலத்திற்கு விதையும் விதைக்க வேண்டுமோ ?

பொருள்

விருந்தோம்பி எஞ்சியதை உண்ணும் இயல்புடையவன் விளை நிலத்தின் விளைவு, பொது நலத்திற்குப் பயன்படுவதால், அவன் ஒருகால், அந்த நிலத்தில் விதைக்கத் தவறினும் மற்றவர்கள் விதைக்க முன் வருவர்.

12. பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 95.

வணக்கமுடைமையும், இன்சொல் வழங்கும் இயல்புமே ஒருவனுக்குச் சிறந்த அணிகள். பிற அணிகள் அணிகளாகா !

பொருள் :

தம்மினும் தாழ்ந்தவரிடத்தும் பணிவுடையவராய்ப் பழகுதலும், எப்போதும் இன்சொல் வழங்குதலும் வேண்டும்.




ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு

மணி 4 | திருவள்ளுவர் ஆண்டு 2007, இராக்கத மாசி, 1976 பிப்பரவரி | ஓசை 8

அருளோசை அன்பர்களுக்கு,

வணக்கம. இந்த இதழில் பேரவைத் தலைவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் 'திருவளர் செல்வனுக்கு என்ற கட்டுரையில் நியாய வைசேடிகத் தத்துவ இயலை மிக அழகாகத் தமக்கே உரிய முறையில் ஆராய்ந்துள்ளார்கள். அதே போன்று திருக்குறள்–இனவெறி உண்டாக்காத இலக்கியம் என்பதை, ஒருமைப் பாட்டுக்குரிய தனி நூல் என்பதை மிக அழகாக–ஆணித் தரமாக அழுத்தமாக விளக்கிக் காட்டியுள்ளார்.

அக்னிஹோத்ரம் ராமாநுஜாசாரியார் அவர்கள் கணக்கற்ற நற்குணங்களை யுடையவனுகவும், எப்பொழுதுமே ஒளி வீசிக் கொண்டிருப்பவனுகவும், அளவிலாத் தொன்மை மிகுந்த புகழை உடையவனுகவும் உள்ள எம்பெருமான் நாராயணன் கழல்களை அடைய வேண்டுவதன் அவசியத்தைத் தக்க காரண-காரியங்களுடன் ஆராய்ந்துள்ளார்.

பேராசிரியர் கா. அ. மணவாளன் அவர்கள் தீராத விளையாட்டுப் பிள்ளையின-குழலோசைப் பெருமையிலே ஈடுபட்ட பெரியாழ்வாரின் உள்ளத்தை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிருர். ஆழ்வார் அநுபவித்த இன்பத்தை நாமும் இரசித்து அநுபவிக்கலாமன்ருே?

திருமுறையைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்த டாக்டர் அ. மா. பரிமணம் அவர்கள் தேவாரப் பெயர்க் காரணம் பற்றியும் தோற்றம் பற்றியும், தமிழகத் திருக்கோயில்களில் திருமுறை வழிபாடு மலரச் செய்ய வேண்டுவதன் இன்றியமையாமை பற்றியும் அறிமுகப் படுத்தும் அழகே அழகு!

சென்னைப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு. ஏ. ஏகாம்பரநாதன் அவர்கள் மிகத் தெளிவான முறையில்–'சேர நாட்டு வழிபாட்டு முறைகள்'-என்ற தலைப்பில் இறைவனை வழிபட வருவோர்

மட்டுமின்றிப் பூசை செய்பவர்கள்— கோயிலில் பணியாற்றும் அலுவலர்கள், ஊழியர்கள் போன்ருேர் கடைப்பிடிக்க வேண்டியவை இன்னின்னவை எனப் பண்டைக்காலத்திலிருந்தே வலியுறுத்தப் பட்டு வந்துள்ளதைத் தக்க சான்று களுடன் நிறுவியுள்ளார்.

பூண்டி புஷ்பம் கல்லூரி—தமிழ்த் துறை யைச் சார்ந்த திரு. பெ. சுப்பிரமணியன் அவர்கள் 'கோயிலும் குடிசையும்' என்ற தொடரில் சிந்தனை தெளிவு மிக்க கருத்துக்களை எழுதியுள்ளார்—அருள் நெறி வழிபட்ட சமூகம் அமைய வேண்டு வதன் அவசியத்தை இவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

குழந்தைகள் உலகம் திரு. ஏ. ஜி. சுப்பிரமண்யம் அவர்கள் பாரதியாரின் பாப்பாப் பாட்டில் ஒரு சில வரிகளைச் சுட்டிக் காட்டி—குழந்தைகளுக்கு எளிய முறையில் விளங்கும்படி எழுதி, குழந்தை கள் வாழும் நெறியைச் சுட்டிக் காட்டி யுள்ளார்.

வழக்கம் போல் எளிய சொற்கள்— இனிமை நயக்கும் தன்மை—இந்தப் பான்மையுடன் சிவனடியார் வரலாற்றை விரித்துரைக்கிருர் திரு. க. கல்யாணம் அவர்கள்.

இத்துணை இதழ்களிலும் படிப்பவர் தம்மை மறக்கச் செய்த நாடகமான 'பிறவாமை வேண்டும்' என்ற தொடர் இந்த இதழுடன் முடிவடைகிறது.

கடந்த இருமாதங்களாக அருளோசை இதழ்கள் காலந்தாழ்த்தி வருவதை அன்பர்கள் பொறுத்தாற்றிக் கொள்ளும் படி அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

—பதிப்பாசிரியர்



## இந்த இதழில்








## இனவெறி உண்டாக்காத இலக்கியம்

இயற்கையின் அடிப்படையிலும், மெய்ந் நெறியின் அடிப்படையிலும் மனிதகுலம் ஒன்றேயாம். மனிதகுலத்திற்கு இடையேயுள்ள வேறுபாடுகள் மாறுபாடுகளாகா. முரண்பாடுகளும் இல்லை. அவை இயற்கையில் அமைந்த தவிர்க்க முடியாத வேறுபாடுகளேயாம். மனிதகுலத்தை நாட்டு அடிப்படையிலோ மொழி அடிப்படையிலோ, நெறி நிற்கும் சமய அடிப்படையிலோ வேற்றுமைப் படுத்துதல் தவறு. திருவள்ளுவர், நாடு, மொழிகளைக் கடந்த சிந்தனையாளராக விளங்குவது போலவே இனங்களைக் கடந்தவராகவும் விளங்குகிறார். திருவள்ளுவர் எந்த ஒரு இனத்தையும் உயர்த்தியும் பேசவில்லை; இழித்தும் கூறவில்லை. அதுமட்டுமின்றி உயிர்க் குலம் அனைத்திற்கும் ஒத்த உரிமை இருக்க வேண்டுமென்று ஐயத்திற்கு இடமின்றிக் கூறுகின்றார். உயிர்க்குலம் பிறப்பளவிற் பெறத்தக்க அடிப்படை உரிமைகளாகிய வாழும் உரிமை, கல்வி உரிமை, தொழில் செய்யும் உரிமை ஆகியனவற்றில் எந்தத் தடையும் இருக்கக் கூடாது என்பது திருவள்ளுவர் கருத்து.




''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்''

என்பது திருக்குறள்.

திருவள்ளுவர் தம் நூலில் இனம், குலம், குடி என்று குறிப்பிட்டுப் பேசுவது உண்மை. இவைகளுக்குச் சில சிறப்பியல்புகளும் திருவள்ளுவர் தந்துள்ளார். ஆனால், இனம் என்ற சொல், திருக்குறளில் காட்டும் பொருள் வேறு. இன்று உலக வழக்கில் இனம் என்ற சொல் பெற்றிருக்கும் பொருள் வேறு. திருக்குறளில் இனம் என்ற சொல், ஒருவர் விரும்பி நலங்கருதி நாடிக் கொள்ளும் நட்பினைக் குறிக்கிறது. ஆனால் இன்று உலக வழக்கில் இனம் என்ற சொல், பெரும்பாலும் மொழியின் அடிப்படையில் வழங்கப்பெறுகிறது. சிறு பகுதி சமய அடிப்படையிலும் வழங்கப் பெறுகிறது; சில இடங்களில் அகந்தையின் காரணமாக நிற அடிப் படையிலும், இனம் பிரித்துச் சுட்டப் பெறுகிறது. இங்ஙனம் குறிக்கப்பெறும்

இனங்கள் திருக்குறளுக்கு உடன்பாடுடையன அல்ல. திருவள்ளுவர் நட்பு நெறியில் நல்லினத்தைச் சிறப்பிக்கின்ருர். நட்பு நெறியில் இனம் என்று சொல்லப்பட்டாலும் அஃது ஒரு கூட்டத்தைக் குறிக்காது. ஒருவர் அல்லது இருவரையே குறிக்கும். நண்பர்கள் பலராதல் இயல்பன்று. நட்பினர் பலராதல் நலம் தராது மாருகத் தீமை தரும். நட்பியலில் சார்ந்தவரை இனம் என்றது, பழகுவார் உடன் நின்று ஒத்துப் பழகி உயர்வினை வழங்கும் பாங்கினுலேயாம். ஓர் எழுத்துக்கு இனமாகும் எழுத்து, பொருளைச் சிறப்பிக்கும்; செவிச் சுவையைக் கூட்டும். ஒரு சுவையுடைய பொருளுக்கு இனமாகும் மற்ருெரு சுவைப் பொருள் பொருளின் சுவையை மேலும் கூட்டும். அதாவது, பாலுக்குத் தேன் இனம். அதுபோல ஒருவர் மற்ருெருவருடன் கொள்ளும் நட்பு அவரை உயர்த்தும் வகையதாக அமைய வேண்டும். தாழ்த்துவதாக அமையின் அது தீது; அது சிற்றினம் என்று கூறித் திருவள்ளுவர் விலக்குவார்.

இங்கு இனம் என்ற சொல், பண்பின் வழிப்பட்ட மனிதனைக் குறிக்கிறது என்பது தெளிவு. அதுபோலவே திருவள்ளுவர் குலம், குடி என்ற சொற்களையும் கையாளுகிருர். வடமொழி வழக்கில் நால்வகை வருணம் பேசப் பெறுகிறது. அதாவது பிராம்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர். இந்த நால்வகை வருணமும்கூடக் கூர்ந்து நோக்கின் பிறப்பின் அடிப்படையில் அல்ல; தொழிலின் அடிம்படையிலேயேயாம். தொழிலின் அடிப்படையில் சிறப்புத் தன்மை எல்லாருக்கும் அமையாது என்பதை 'சிறப்பொவ்வா செய் தொழில் வேற்றுமையான்' என்று திருவள்ளுவர் உடன்படுகிருர். ஆனுல், தமிழ் வழக்கில் குலம் திரிந்ததைப்போல, இங்கும் நால்வகை வருணத்தின் பொருள் திரிந்து விட்டது. இன்று நால்வகை வருணம் பிறப்பின் அடிப்படையிலேயே வற்புறுத்தப்படுகிறது. பண்டு ஒரு வருணத்திலிருந்து இன்னெரு வருணத்திற்கு முறையாக வளர்ந்து உயர்த்திக் கொள்ளும் உரிமை இருந்தது. இன்று அந்த உரிமை மறுக்கப்படுகிறது. வடமொழி வழக்கில் வசிஷ்டரும், தமிழ் வழக்கில் திருநாளைப்போவாரும் முறையாக வளர்ந்து உயர் வருணத்தை எய்தினர். அதை அன்றைய சமூகம் ஏற்றுக் கொண்டது. வசிஷ்டர் காலத்தில் எளிதாக இருந்த ஒன்று, திருநாளைப் போவார் காலத்தில் கடுமையாக இருந்தது என்பதை உய்த்துணர முடிகிறது. ஆனுலும், திருநாளைப்போவார் காலத்தில் உரிமைகள் முற்ருக மறுக்கப்படவில்லை என்பது உண்மை

திருவள்ளுவர் காலத்தில் குலம், குடி என்ற சொற்களுக்கிருந்த பொருள் வேறு மாணிக்கவாசகர், அப்பரடிகள் காலத்தில் குலம் என்ற சொல்லுக்குரிய பொருள் திரிந்து போயிற்று. அப்பரடிகள் காலத்தில் குலம் என்ற சொல் பிறப்பின்வழி சாதியைக் குறிப்பதாக அமைந்து விட்டது. அதனுல் அப்பரடிகள்,

"சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டு என்
செய்வீர்?"

என்று கேட்கிருர். மாணிக்கவாசகரும்

"சாதி, குலம் பிறப்பென்னும் சுழி
பட்டுத் தடுமாறும் ஆதமிலி
நாயேனை"

என்று குறிப்பிடுகின்ருர். இங்குக் குலம் என்பது உயர் பொருளில் கையாளப் பெறவில்லை. திருவள்ளுவர் காலத்தில்

குலம் என்ற சொல்' குறிப்பிட்ட பண்பின் வழிக் கூடி வாழும் சிலரைக் குறித்தது குலத்தின் இலக்கணமாகத் திருவள்ளுவர் கூறுவது நற்பண்புகளேயாம். பிறப்பை யாண்டும் குறிப்பிடவில்லை. குலம் என்பது ஓரிடத்தில் தொகுதியாக ஒரு நெறியில் கூடி வாழும் சிலரைக் குறிப்பதாகும். இந்தக் குல அமைப்பு, வேறுபாடுகளைத் தோற்றுவிக்காது உயர்வின்பாலே உய்த்துச் செலுத்தும்' இதனாலேயே கம்பர்,

''குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிகட் கெல்லாம்''

என்றார். கம்பரின் கருத்து, அவர் சிந்தனைச் செழுமையே தவிர அவர் காலத்து நடைமுறை அதுவன்று.

திருவள்ளுவர் அடுத்துக் கையாளும் சொல், குடி என்பது. இதுவும் பண்பின் வழிப்பட்ட சொல்லேயாம். ஒருதலைமுறையைக் குறிக்கும் சொல்லைத் தான் குடி என்று குறிப்பிடுகின்றார். ஒருவனுடைய வழிவழித் தலைமுறை, குடி என்று குறிப்பிடப்பெறும். மூதாதை என்று திருவாசகம் குறிப்பிடும். ஆக திருவள்ளுவர், மனிதகுலத்தை வேற்றுமைப்படுத்தும் இன, சாதி, வகுப்பு வேறுபாடுகளை முற்றாக மறுக்கிறார். மறந்தும்கூட இன, சாதி, வகுப்பு வேறுபாடுகளை அவர் ஊக்குவிக்கவில்லை. பரந்த தேசீய உணர்ச்சியை வளர்ப்பதற்குரிய விழுமிய நூல் திருக்குறளேயாம். திருக்குறள் காட்டும் குலம், திருக்குறள் காட்டும் குடி, திருக்குறள் காட்டும் இனம் ஆகியன நாட்டு வழிப்பட்டதல்ல; பிறப்பின் வழிப்பட்டதல்ல; பண்பாட்டின் வழி வடதுருவத்தில் வாழும் மனிதன், தென்துருவத்தில் வாழும் மனிதன் ஒருவனை இனமாகக் கொள்ளலாம்; கொள்ள வேண்டும். இதுவே திருக்குறட்கருத்து. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாடு, இன, மொழி வேறுபாடுகளைக் கடந்து மனிதர் எங்குப் பிறந்தாலும், ஒத்த உரிமையுடையவர்கள் என்று முழங்கிய திருக்குறள்,

''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்,'

என்று கூறியது இந்நெறி வையகத்தில் வளர்க! ஒருமைப்பாட்டுக்குரிய ஒரு தனி நூல் திருக்குறளேயாம்.

(தொடரும்)

# பாரதியாரின் பாப்பா பாட்டு

குழந்தைகள் உலகம் ஏ. ஜி. சுப்பிரமணியம்

குழந்தைகளுக்கு எது பிடிக்கும்? குழந்தைகள் எப்படி இருக்க வேண்டும்? இதோ பாரதியாரின் குரல்,

"ஓடி விளையாடு பாப்பா-நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!

அழகான சின்னஞ் சிறு குருவிகள் பறந்து செல்வதைக் கண்டு, குழந்தைகள் இன்புறுவதை அவர் காண்கின்றார். நம் நாட்டில் குடிசைகளில் கோழியும், சேவலும், குஞ்சுகளும் அவர்கள் கவனத்தைக் கவர்வன என்பதை அவர் அறிவார்.

திருடுகின்ற குணம் கெட்ட குணம். அதைக் காக்கைகளிடம் கண்டு அதைத் திட்டிப் பேசி வெறுத்து ஒதுக்கி விடக்கூடாது.

நம்முடன் திருடர்களும் சமூகத்தில் வாழ்கிறார்கள். அவர்களிடமும் அன்பு காட்டி நம்முடன் கூடி வாழச் செய்வதில் நமக்குப் பங்குண்டு. அதுவே நம் வாழ்வுக்கு வெற்றியளிக்கும்.

எத்தித்திருடும் அந்தக் காக்காய்-அதற்கு
இரக்கப்பட வேணும் பாப்பா!

என்ற வரிகளால் உணர்த்துகின்றார். பாலைத் தரும் பசு, வாலைக் குழைக்கும் நாய், வண்டி இழுக்கும் குதிரை, வயலில் உழுகின்ற மாடு இவை நமக்கு உதவி செய்கின்றன. பெரியவர்களும், குழந்தைகளும், இந்த வீட்டு விலங்குகளிடம் அன்புடன் இருப்பார்கள். நம்மிடம் சிலர் அண்டி வாழ்வார்கள். வயதானவர்கள், நோயுற்றோர், ஆதரவில்லாத உறவினர்கள் சிலர் நம் வீடுகளில் வாழ்வார்கள். நம் ஆதரவை நாடியே அவர்கள் இருக்கிறார்கள். அப்படி நம்மிடம் அண்டி வாழ்பவர்க்காகவே.

"அண்டி பிழைக்கும் நம்மை ஆடு......
ஆதரிக்க வேணுமடி பாப்பா"

என்று குழந்தைகளிடம் கனிவுடன் எடுத்துரைக்கின்றார்.

காலையில் எழுந்தவுடன் படிக்கவும், நல்ல பாட்டுகளைப் பாடவும் மாலையில் விளையாடவும் குழந்தைகளை உற்சாகப்படுத்திவிட்டு, பொய் சொல்லவும், புறஞ்சொல்லவும் கூடாது என்பதைப் பக்குவமாய் எடுத்துரைக்கின்றார்.

தெய்வம் நமக்குத் துணையிருப்பதால் தீங்கு வராது, துன்பம் நீங்கும் என்று தைரியமளிக்கிறார்.

குழந்தைகள் வீரமுள்ளவர்கள். அவர்களைக் கோழைகளாக வாழச் செய்தல் கூடாது. "பாதகஞ் செய்பவரைக் கண்டபோது பயப்படாதே! மோதி மிதித்துவிடு, முகத்தில் உமிழ்ந்திடு" என்று ஊக்குவிக்கிறார்.

குழந்தைகளின் வணக்கத்திற்குரிய மாதா, பிதா, குரு, தெய்வம் இவர்களிடம் பக்தியும், பாசமும் இருப்பது அவசியம். ஆகவே "தாய் சொன்ன சொல்லை தட்டாதே பாப்பா!" என்று சொல்லுகின்றார்.

பெற்ற தாயையும், பிறந்த பொன்னாட்டையும், தாய்மொழியை குழந்தைகள் போற்றும்படி செய்வதில் பாரதியார் வல்லவர். நம் தேசம் எப்படிப்பட்டது? நாம் என்ன செய்ய வேண்டும்?

செல்வம் நிறைந்த ஹிந்துஸ்தானம்-
அதைத்
தினமும் புகழ்ந்திடடி பாப்பா!

என்கிறார்.

யார் மேலோர்?

சாதிகள் இல்லையடி பாப்பா-குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
நீதி, உயர்ந்தமதி, கல்வி-அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர்!"

இப்படிப்பட்ட முன்னேற்றக் கருத்துக்களை இளம் நெஞ்சங்களில் விதைக்கின்றார். தெய்வத்தின்மீது நம்பிக்கை உடையவர்களை நாம் நல்வழிப்படுத்தல் எளிது. ஆகவே குழந்தைகளிடம் தெய்வபக்தி ஏற்படும்படி செய்தல் பெரியவர்களுடைய கடமையாகும்.

இவ்வுலகில் எல்லா உயிர்களும் கடவுளின் கருணையால் வாழ்பவை. ஆகவே கடவுள் நமக்குத் தந்தை. நாம் எல்லா உயிர்களிடத்தும் அன்பு காட்ட வேண்டுமல்லவா! அது எளிதல்ல. எனவே வயிரமுடைய நெஞ்சு வேண்டும். கடுமையாக நாம் உழைக்க வேண்டும். நாம் நமக்காக மட்டுமல்ல. மற்றவர்களுக்காகவும் பாடுபட வேண்டிய அவசியத்தை உணர்வோமாக.

நம் நல்வாழ்விற்குப் பலர் பாடுபடுகிறார்கள். நாமும் அவ்வாறே உழைத்தால் நம் தந்தையான கடவுள் நம்மைப் பார்த்து மகிழ்ச்சியடைவார். அவர் அருள் கிடைக்கும்.




திருவளர் செல்வனுக்கு,

நல்வாழ்த்துக்கள்!

திருவளர் செல்வ, இந்திய தத்துவ ஞானங்களுள் ஒன்ருகிய வைசேடிகம் பற்றி எழுதுவதாகச் சென்ற கடிதத்தில் குறிப்பிட்டிருந்தோம். செல்வ, தத்துவ ஞான உலகம் சிந்தனைக்கு அரியது. முயன்று சிந்தித்தால் தத்துவஞானம் கைவரும். தத்துவஞானத் தெளிவு கற்பதனல் மட்டும் பெறப்படுவதன்று. ஓயாது சிந்தனை செய்யும் பாங்கில்தான் தத்துவஞானம் விளக்கமுறும். வைசேடிகம், நியாய வைசேடிகம் என்றும் அழைக்கப் பெறும். நியாயம் என்ற சொல் நையாயிகர் என்ற சொல் வழிப் பிறந்தது. நையாயிகர் ஒருவகைத் தத்துவக் கொள்கையினர். நையாயிகரின் கொள்கைக்கும் வைசேடிகத்திற்கும் கருத்தொற்றுமை மிகுதியும் உண்டு. அதனல், நியாய வைசேடிகம் என்ற வழக்கு தோன்றிற்று.

நியாய வைசேடிகத் தத்துவச் சிந்தனை சற்றேறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியது. நியாய வைசேடிகத் தத்துவ இயல் வளர்ந்த போக்கின் காரணமாக முற்காலம்–பிற்காலம் என்று பகுத்துக் காணக் கூடிய அளவுக்கு வளர்ச்சி தென்படுகிறது. கிறித்து பிறப்பதற்கு மூன்று நூற்றுண்டுகளுக்கு முன் தொடங்கி கி. பி. 1200 வரையில் முற்கால வைசேடிகம் ஆகும். கி. பி. 1200க்கு பின் பிற்கால வைசேடிகமாகும். வைசேடிகத்தின் முதல் நூல் கௌதமரது நியாய சூத்திரம் என்பர். வைசேடிகத்தின் மெய்ப்பொருளியலை விளக்கும் சிறந்த நூல் கணாதர் இயற்றிய வைசேடிக சூத்திரமாகும். இந்நூல் நியாய சூத்திரத்துக்கு முந்தியது என்ற கருத்தும் உண்டு.

நியாய வைசேடிக சமயம் அளவை நெறியையும், அறிவு ஆராய்ச்சி இயலையும் முதன்மையாகக் கொண்டதாகும். நியாய வைசேடிகம் எந்த ஒரு தத்துவத்திலிருந்தும் கிளைத்துத் தோன்ருமல் தனி நிலையில் தோன்றியது. பௌத்தத்தின் தோற்றக் கொள்கையையும், கருத்து முதற் கொள்கையையும் எதிர்க்கும் ஆற்றல் மிக்க சிந்தனையாக நியாய வைசேடிகம் தோன்றிற்று. நியாய வைசேடிக மெய்ப்பொருளியல் அறிவு ஆராய்ச்சியியல்–புலன் கடந்த பொருளியல் என இருவகைப்படும்.

திருவளர் செல்வ, தத்துவஞான உலகில் அடிப்படையான விவாதத்திற்குரிய சிக்கல்கள் இரண்டு உண்டு. இந்த அடிப்படை விவாதப் பொருளிலிருந்து

தான் தத்துவ இயல்கள் பலவாகின்றன. மனம் மட்டுமே உள் பொருளா? மனம் மட்டுமன்றிப் புறத்தே காணப்பெறும் பொருள்களும் உண்மையில் உள்ளன வா? என்ற விவாதம்! வெளிப்படையாக நோக்கின் இஃதொரு பொருளற்ற கேள்வி போலத் தோன்றுகிறது. ஆனல், இந்த விவாதத்திலிருந்துதான் தத்துவ ஞானக் கருத்துக்கள் தோன்றுகின்றன. உண்மையில் உள்ள பொருள் மனமா? அல்லது புறத்தே காணப்பெறும் உலகா? அல்லது இரண்டுமா? அல்லது இரண்டுமே இல்லையா என்பது தத்துவ ஞான உலகத்தின் கேள்விகள். இக் கேள்விகளுக்கு வைசேடிகர், "மனமும் உள்பொருள்; புறத்தே காணும் பொருள் களும் உள்பொருள்" என்று கூறுகின்ற னர். ஆதலால், வைசேடிகர் முன்னர் நாம் குறிப்பிட்ட மெய்ம்மைவாதிகளாவர். திருவளர் செல்வ, தத்துவ இயலின் விவாதத்திற்குரிய இரண்டாவது பொருள் எது எனில், உலகம் எதிலிருந்து உற்பத்தியானது? உலகத் தோற்றத்திற்கு மூலப்பொருள் ஒன்ரு? பலவா? என்பதாகும். உலகம் என்றும் உள்பொருள் என்ற வைசேடிகர், உலகத் தோற்றத்திற்கு மூலப் பொருள் ஒன்று உண்டு என்று ஏற்றுக்கொள்ள மாட்டார் கள் அல்லவா? பல்வேறு இயல்பு களுடைய இந்த உலகத்திற்கு மூலமும் பல பொருள்களே என்பது வைசேடிகக் கொள்கை. ஆக வைசேடிகர் கருத்துப் படி உலகம் ஒரு பொய்த் தோற்றமன்று. உலகம் உண்மையானது. உலகிற் காணப்படும் பொருள்களும் நிலையான வை; உண்மையானவை.

திருவளர் செல்வ, இங்ஙனம் உலகு உண்மையானது என்று வைசேடிகர் ஒத்துக்கொண்டாலும் உலகும் உலகின் பொருள்களும் அழிந்து அழிந்து தோன்றுவதை அவர்கள் அறியாமலில்லை. சாதாரணமாக பொருள்களின் அழிவை ஒரு எல்லை வரை சென்று ஆராய்பவர் களே மிகுதி. தொடர்ந்து தொல்லை களைத் தாங்கிக்கொண்டு ஆராய்பவர்கள் ஞானிகள். நியாய வைசேடிகத் தத்துவ இயலைச் சார்ந்த ஞானிகள் இந்த வகை யில் தொடர்ந்து முயன்றவர்கள்.

பொருள்களின் தோற்றம் என்பது என்ன? அழிவு என்பது என்ன? என்ற வினுக்களுக்கு விடை காணும்பொருட்டு ஒவ்வொரு பொருளையும் கூர்ந்து கவனித் தனர் வைசேடிகர். கண்ணுக்குப் புலனுகும் ஒவ்வொரு பொருளும் பிரிக்கக் கூடியதாகவே விளங்குகிறது. ஆதலால், கண்ணுக்குப் புலனுகும் பொருள்கள் பிரிப்பதற்கு உரியனவாக இருத்தலால் அப்பொருள் பலபகுதிகளால் ஆயது. பல பகுதிகள் ஒன்றுசேர்வதே பொருளின் தோற்றம் என்பது ஒரு கருத்து. ஒன்று சேர்ந்த அப்பொருள்-அப்பொருளின் பகுதிகள் பிரியும்பொழுது பொருளுக்கு அழிவு தோன்றுகிறது. ஆடையில் நூல் பகுதி. எப்பொருள் பகுதிகளையுடையதோ அது அழியும். ஆனல், வைசேடிகர் எந்தப் பொருளைப் பகுத்துக்கொண்டு சென்ரு லும் கடைசி எல்லையில் பகுதியற்ற ஒரு நிலையைக் காணமுடியும். பகுதியற்ற நுட் பமான பொருளை வைசேடிகர் அணு என் பர். அவையே பலவாகும்பொழுது பரமா ணுக்கள் என்று பெயர் பெறுகின்றன. அணுக்களைப் பிரிக்க இயலாது. ஆதலால் அவை அழியாதவை. அந்த அணுக்களே உலகத் தோற்றத்திற்குக் காரணம். அழியாத அணுக்களே இந்த உலகத்தை ஆக்கி, அழிக்கின்றன என்பது வைசேடி கரின் சிந்தனை. இவை பற்றித் தொடர்ந்து மேலும் எழுதுவோம்.

இன்ப அன்பு

இன்றக்செல்வ...




## (6) கண்ணன்

### கண்ணன் குழலோசை

கண்ணன் குழலோசையின் பெருமையைப் பெரியாழ்வார் தம் அழியாப் பாடல்களின் வாயிலாக நன்கு விளக்கியுள்ளார் கண்ணனின் பிஞ்சு விரல்கள் குழலின் துளைகளை மூடி மூடித் திறக்கின்றன. அவன் கண்கள் அத்துளைகளின் வழியே ஓடுகின்றன. காட்டிலே விளையாடிய கண்ணன் ஒரு மரத்தடியிலே ஓய்வெடுத்து ஊதுகிறான். ஆனாலும் அவன் மாய முகத்தில் முத்துத் துளிகள் போன்று வேர்வைத் துளிகள் துளித்துள்ளன. அவன் அமுத கீத வலையில் சுருக்குண்டு நாணி மயங்கி நின்றவர்கள் தான் எத்தனை பேர்? அக் கண்ணன் விரல்களால் குழலைத் தடவிப் பரிமாறும்போது, அவனுடைய கண்கள் கோணுகின்றன. வாய் கொப்பளிக்கவும் புருவம் கூடலிப்பவும் அவன் வேணுகானம் செய்கிறான்.

மலைச்சிகரங்களில். சாரல்களில் மேயும் பசுக்களை அழைக்கும் குழலோசை கூடுகளை நோக்கிச் செல்லும் பறவைகளின் காதுகளிலும் விழுகிறது. அவ்வளவு தான். தங்கள் கூடுகளை மறந்து குழலோசையில் ஈடுபட்டு, வெட்டி வீழ்த்தப்பட்ட காடுகளைப் போல பறவைகள் கண்ணனைச் சூழ்ந்துகொண்டன. மேய்ந்து கொண்டிருந்த பசுக் கூட்டங்களோ தங்கள் மேய்கையை மறந்து கால்களைப் பரப்பிக் கொண்டு செவிகளையும் அசைக்காமல் எங்கே இசையின் இன்பம் தடைபடுமோ என்று அவைகள் செவியாட்டாமல் கேட்டு அனுபவித்தன என்கிறார் ஆழ்வார்.

"பறவையின் கணங்கள் கூடுதுறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்பக்
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந்திரங்கிச் செவியாட்டகில் லாவே"

என்பதே அப்பாட்டு.

வானவர்களெல்லாம் தங்கள் அவியுணவை மறந்தார்கள். கோவிந்தன் குழலோசையாகிய செவியுணவைப் பெற்று மகிழ்ந்து ஆயர்பாடியெங்கும் வந்து புகுந்தார்கள். வழக்கமாக நடனமாடுகின்ற தேவ மாதர்களாகிய மேனகையும், திலோத்தமையும், ஊர்வசியும் கூடத் தங்கள் ஆடலையும் பாடலையும் விட்டு விட்டுக் குழலிசையில் மயங்கினார்கள். தும்புருவும் நாரதரும் தங்கள் வீணையை மறந்தார்கள். இவ்விதம் இசையில் வல்ல தேவர்களையும் ஈர்க்கவல்ல குழலிசையானது இந்நிலவுலக மக்களையும் மாக்களையும் கவர்ந்ததில் வியப்பில்லையன்றோ!

காளமேகம் போன்ற கருநிறமுடைய கண்ணன் தன் கூந்தல் அலையக் குழல் ஊதுகிறான். மான் கூட்டங்கள் அறிவழிந்து மேய்ச்சலையும் மறந்தன. வாயில் கவ்விய புல்லும் கடைவாய் வழியாக நழுவி விழுகிறது. அப்படியே ஆடாமல் அசையாமல் தரையில் நின்று விட்டன. ஆம்! சுவரில் எழுதப்பட்ட சித்திரங்கள் போல் அவைகள் காட்சியளித்தன என்று ஒரு அருமையான சொல்லோவியத்தை வழங்கியுள்ளார் ஆழ்வார்.

கா. அ. மணவாளன்

சுருண்டிருண்ட குழல் தாழ்ந்த முகத்தான்
ஊதுகின்ற குழலோசை வழியே
மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர
இரண்டு பாடுந்துலங்காப் புடைபெயரா
எழுது சித்திரங்கள் போல நின்றனவே"

என்பதே அச்சொல்லோவியம்.

குன்று குடையாக எடுத்தல்

இந்திரனுக்குரிய பூஜையையும், படையலையும் கண்ணனே பெற்றுக் கொண்டான். ஆம்! மலை மலையாகக் குவிக்கப்பட்ட அன்னம். தடாகம் போன்று தயிரும் நெய்யும் சேர்க்கப் பட்டுள்ளது. இவைகளையெல்லாம் ஒரே கவளமாகத் தின்று விட்டான் மாயக்கண்ணன்.

"அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும்
தயிர் வாவியும் நெய்யளறு மடங்கப்
பொட்டத்துற்றி"

என்கிறார் ஆழ்வார். இந்திரனுக்குக் கோபம் வந்துவிட்டது. மேகங்களை ஏவினன். ஏழு நாள் விடாமழை. எங்கும் பெருவெள்ளம். ஆனல் அருகிலிருந்த கோவர்த்தன மலையையே எடுத்துக் குடையாகப் பிடித்து மக்களையும் பசு மாடுகளையும் கன்றுகளையும், மற்ற உயிரினங்களையும் ஒரு ஆபத்துமின்றிக் காப்பாற்றினன் கண்ணன்.

கண்ணன் அக்கோவர்த்தனக் குன்றைக் குடையாகத் தூக்கிக் காப்பாற்றினனே! அவனுக்கு எவ்வளவு கஷ்டம்! எவ்வளவு வாட்டம்! என்றெல்லாம் ஆயர்கள் அனுதாபம் காட்டினர்கள். ஆனல் ஆழ்வாரோ அவனுக்கு ஒரு வாட்டமும் இல்லை என்கிறார். கண்ணன் தன் செந்தாமரை மலர் போன்ற திருக் கை விரல்களாலே மலையைத் தாங்கி நின்றனும். அவனுடைய தோள்கள் குடைக்காம்பு போலே இருந்தனவாம். அவனுடைய திருக்கை விரல்களும், திருக்கோலமும் இதனல் சிறிதும் வாட்டமடையவில்லை; விரல் நகங்களுக்குக் கூடக் கஷ்டமில்லையாம். மாயத்தாலே தான் அம்மலையைத் தாங்கினன் அம்மாயவன் என்கிறார். இது ஒரு செப்பிடுவித்தையாம் அவனுக்கு. பாட்டைப் பாருங்கள்:

"கொடியேறு செந்தாமரைக் கை விரல்கள்
கோலமும் அழிந்தில வாடிற்றில
வடிவேறு திருவுகிர் நொந்துமில, மணி
வண்ணன் மலையுமோர் சம்பிரதம
முடியேறிய மாமுகில் பல்கணங்கள்
முன்னெற்றி நரைத்தன போல எங்கும்
குடியேறியிருந்து மழை பொழியும்
கோவர்த்தன மென்னுங்கொற்றக்
குடையே".

பெரியாழ்வாரைப் போலவே வேறு பல ஆழ்வார்களும் கண்ணனை–அனுபவித்துப் பாடிய பாடல்களில் சிலவற்றைக் காண்போம். தேவகி இழந்த பிள்ளைமை இன்பத்தை அவள் பாவனையிலேயே குலசேகரர் பாடிய பாடல்கள் நம் நெஞ்சத்தை உருக்குவனவாக அமைந்துள்ளன.

ஆலைக் கரும்பு போன்ற கண்ணனே! தாமரை மலர் போன்ற விசாலமான திருக்கண்களையுடையவனே! கடல் நிறவண்ணனே! உன்னை நான் மகனகப் பெற்றேன். என்றலும் உன்னை வாயாரப் பாடித் தாலாட்டும் பாக்கியத்தை யான் பெறவில்லையே என்கிறள் தேவகி.

ஏலவார் குழல் என் மகன் தாலோ !
என்றென்(று) உன்னைஎன் வாயிடை
நிறையத்
தால் ஒலித்திடும் திருவினை இல்லாத்
தாயரில் கடை யாயின தாயே!"

என்பதே அவர் பாட்டு.

ஆம்! அவ்வளவு அழகான குழந்தையை யார்தான் விரும்ப மாட்டார்கள். தாய்மார்களும், பாட்டிமார்களும் மற்றும் உற்றர் உறவினரும் மாறி மாறி அக்குழந்தையை எடுத்து வைத்துக் கொள்கிறர்களாம். 'என் அப்பனே! என் குலப் பெருஞ்சுடரே' என்று கொஞ்சுகிறர்கள். 'உன் அப்பா யார் காட்டு' என்று அக்குழந்தையின் பிஞ்சு விரல்களைத் தொடுகிறர்கள். அக்குழந்தையும் தன் செங்கேழ் விரலாலும் கடைக் கண்ணலும் அருகேயுள்ள நந்தகோபரைத் தந்தை என்று சுட்டிக் காட்டுகிறதாம். இதை எண்ணிப் பார்க்கிறள் தேவகி. வாசுதேவன் கொடுத்து வைக்கவில்லையே என்று பெருமூச்சு விடுகிறள்.

புண்ணியவான் ஆகையால் நந்தகோபன் இப்பாக்கியத்தைப் பெற்றான் என்று ஆறுதலடைகிறான்.

"உந்தை யாவன் என்(று) உரைப்ப, நின் செங்கேழ்
விரலினும்கடைக் கண்ணினும் காட்ட
நந்தன் பெற்றனன் நல்வினையில்லா
நங்கள் கோன்வசு தேவன் பெற்றிலனே!

குழந்தையின் நெற்றியிலே ஒரு சுட்டி அசைகிறது. அது அவ்வளவு அழகாகவும் பொருத்தமாகவும் இருக்கிறது. அச்சுட்டி அசைய அசைய அக்குழந்தைக் கண்ணன் யசோதைக்கு முத்தம் அளிக்கிறான். அப்போது யசோதை எல்லையில்லா ஆனந்தமடைகிறாள். நந்தகோபருடைய நினைவும் வருகிறது. உள்ளம் குளிர்கிறாள். கண்ணனையே உற்றுப் பார்க்கிறாள். கண்ணனோ தனது சிவந்த வாயில் விரல்களை யெல்லாம் விட்டு குதப்பிக் கொண்டு வெகுளியாய் ஏதேதோ பேசுகிறான். எவ்வளவு இன்பம் யசோதைக்கு? இந்த இன்பங்களெல்லாம் நமக்கில்லையே என்று ஏங்குகிறாள் தேவகி. பாட்டைப் பாருங்கள்.

மருவும் நின்திரு நெற்றியில் சுட்டி
அசைதர மணி வாயிடை முத்தம்
தருதலும், உன்தன் தாதையைப் போலும்
வடிவு கண்டு கொண்டு உள்ளம் உள்குளிர,
விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்று உரைக்கும் அவ்வரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வ நங்கை யசோதை பெற்றாளே!

இவற்றையெல்லாம் 'இழந்தேனே இழந்தேனே' என்று தேவகி புலம்புவதை ஆழ்வார் எவ்வளவு உருக்கமாகப் பாடியுள்ளார். இது மட்டுமா? மற்றொரு சொல்லோவியத்தையும் காண்போம்.

கண்ணன் வெண்ணெய் அளைகிறான். முழுதும் துழாவித் தொட்டு உண்கிறான். அப்படி வெண்ணெயைக் களவு செய்து சாப்பிடும் கண்ணனைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டாள் யசோதை. கயிற்றால் கட்டி நன்கு அடிக்க நினைத்தாள். கண்ணனுடைய இளம் சிறு தாமரைக் கைகளைக் கெட்டியாகப் பிடிக்கிறாள். அடிக்கக் கையை ஓங்குகிறாள். கண்ணன் மெல்ல அவளை நிமிர்ந்து பார்க்கிறான்.

வெளுத்த தயிரும் சிவந்த வாயும் பயந்த பார்வையும் அவளை என்னவோ செய்கின்றன! திரும்பவும் கூர்ந்து பார்க்கிறாள். கண்ணன் அழுகிறான்; அஞ்சிப் பார்க்கிறான்; வாய் நெளிக்கிறான்; தொழுகிறான். இவைகளை யெல்லாம் கண்ட யசோதை கயிற்றைக் கீழே போட்டு விட்டாள். வாரி அக்குழந்தையை அணைந்து உச்சி மோர்கிறாள். ஆம்! அவள் எவ்வளவு பாக்கியம் செய்தவள். இப்பூவுலகில் பரமபத இன்பத்தையே கண்டு விட்டாள் என்கிறார் ஆழ்வார்.

முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டு உண்ணும்
முகிழ் இளஞ்சிறு தாமரைக் கையும்
எழில் கொள் தாம்புகொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும், வெண் தயிர் தோய்ந்த செவ்வாயும்
அழுகையும் அஞ்சி நோக்கும் அந்நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெறிப் பதுவும்
தொழுகையும் இவை கண்ட யசோதை
தொல்லை யின்பத்திறுதி கண்டாளே.

என்பதே குலசேகராழ்வாரின் அருமையான சொல்லோவியம்.

### ஊடலும் கூடலும்

அவள் கண்ணன் மேல் காதல் கொண்டாள். அவளுக்கே அவன் உரியவன் என்று எண்ணியிருந்தாள். பேதைப் பெண்! பாவம். அவன் சொன்னபடியே யமுனை யாற்றங்கரையில் இரவெல்லாம் காத்திருந்தாள். மழை பெய்வது போலப் பனி கொட்டிக் கொண்டிருந்தது. அந்தக் குளிரில் நடுக்கத்தோடு நின்றிருந்தாள். மணற்குன்றில் மறைந்து நின்று காத்திருந்தாள். பொழுது விடியும் வரை பனியில் கூசிக் கூசி நின்றிருந்தாள். அவனோ வரவில்லை. அவனுக்கென்ன! ஊரிலுள்ள இடைப் பெண்களெல்லாம் அவனுக்குச் சொந்தமல்லவா? ஏமாற்றத்தால் அவள் பாடுவதாக அமைந்த பாடலின் ஒரு பகுதியைப் பாருங்கள்:

கூர்மழை போல்பனிக் கூசல் எய்தி
கூசி நடுங்கி யமுனையாற்றில்
வார் மணல் குன்றில் புலர நின்றேன்
வாசுதேவா! உன் வரவு பார்த்தே!

வேறொரு காட்சி

கண்ணன் புல்லாங்குழல் ஊதிக் கொண்டு வருகிறான். ஆயர்பாடிப் பெண்களில் சிலர் அவனைச் சூழ்ந்துகொண்டு வருகிறார்கள். அக்கண்ணன் மார்வில் மங்கல மாலை அசைகிறது. அவன் தலையில் மயில் பீலி பறக்கிறது. அரையில் பொன்னுடை மிளிர்கிறது. காதில் பூங்கொத்து துலங்குகிறது. வாயில் புல்லாங்குழல் இசைக்கிறது. நறுங் கூந்தலையுடைய பெண்கள் அவனைச் சூழ்ந்து வருகின்றனர். அவனைப் பார்த்த வேறு சில கோபிகைப் பெண்கள் "இப்படி இவர்களுக்காகப் புல்லாங்குழல் ஊதி வரும் நீ எங்களுக்காகவும் ஒருநாள் இவ்விதம் இசைத்து எங்களுடன் கூடி மகிழலாகாதா" என்று கேட்கிறார்கள்.

மங்கல நல்வன மாலை மார்வில்
இலங்க, மயில்தழைப் பீலி சூடிப்
பொங்கிள ஆடை அரையில் சாத்திப்
பூங்கொத்துக் காதில் புணரப் பெய்து
கொங்கு நறுங்குழ லார்களோடு
குழைந்து குழல் இனி தூதி வந்தாய்.
எங்களுக்கே ஒருநாள் வந்தூத
உன் குழல் இன்னிசை போதராதே''

இப்பாடலில் ஆயர்பாடிப் பெண்களின் ஆழமான காதல் கொந்தளிப்பதைக் காணலாமன்றோ!

(தொடரும்)

உ

# "சூடிக் கொடுத்த சுடர்க்கொடி"

புலவர் த. கோடப்பிள்ளை, எம்.ஏ.,

## காட்சி 15 (தொடர்ச்சி)

ஆண்டாள் : [மெய்மறந்து] ஆ...... அன்புடைய மால்வண்ணன் ஆங்காங்கே பல வடிவங் கொண்டான் என்றீர்கள். இன்னும் சொல்லுங்களப்பா!

பெரியாழ்வார் : சொல்கிறேனம்மா! அமிழ்தினுமினிய தமிழ்கூறும் நல்லுலக வடவெல்லையிலே—திருப்பதி எனும் திருத்தலத்தில்-திருமால் நின்ற கோலத்துடன் விளங்குகிருன். கலகலவென ஓசையிட்டு ஓடும் அருவிகள் இழியும் அத்திருவேங்கடம் என்னும் ஓங்குயர் மலையத்து உச்சிமீது கதிர்களையுடைய ஞாயிறும் திங்களும் விளங்கி இருபக்கமும் ஓங்கி நிற்க, இடையே மின்னலாம் புத்தாடையுடுத்து விளங்குகின்ற வில்லாகிய பணியைப் பூண்டு நன்னிறமேகம் நின்றது போலப் பகையழிக்கும் சக்கரத்தையும் பால்வெண் சங்கையும் தாமரைபோலும் வலக் கையிலும் இடக்கையிலும் ஏந்தி அழகு மிளிரும் மார்பில் ஆரம்பூண்டு பொலம் பூவாடை உடுத்தி சிவந்த திருக்கண் உடைய நெடியோன் நின்றருளுகிருன். பூவிரி சோலை இருமருங்கும் கொண்ட காவிரி தன் திரைக்கரங்களால் எம் பெருமான் திருவடி அலும்பும் திருவரங்கத்திலோ திருமால் கிடந்தருள்கின்ருன் குடதிசை தலைவைத்து குணதிசை கால்நீட்டி வடக்குப் புறங்காட்டி, தெற்கு முகங்காட்டி கிடந்த கோலமாய் தோற்றமளித்தருள்கின்ருன். புன்னையும் தென்னையும் பாளைக் கமுகும் பொலிந்து பூமணம் பரப்பும் சோலை சூழ் அத் திருவரங்கத்திலே திருத்துழாய் மால்வண்ணன் நெடும்பெருங்குன்றம்மீது நீலநிறமேகம் பக்கமெல்லாம் படர்ந்தகலாது படிந்ததுபோல ஆயிரம் தலைஅரவின் அருந்திறல் பாயலில் பள்ளிகொண்டு பலரும் தொழுதேத்த திருவமர் மார்பன் கிடந்த வண்ணமாய் நாளும் காட்சி தந்தருள்கிருன். விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தி யாம் இன்னரங்கத்து இன்னமுதப் பேரழகும் சொல்லப் போமோ? பச்சைமா மலைபோல் மேனியழகும் பவளச் செங்கனி வாயழகும் கருங்கூந்தலழகும், செங்கமலம்போல் விளங்கும் கண்ணழகும் ஆகா...எம்பெருமானின் அழகே அழகு.

ஆண்டாள் : அழகே அழகு!......அணி அரங்கத்தம்மான் அவ்வழகே யான் விரும்பும் பேரழகு அப்பா..... அரங்கமேவிய அழகிய மணவாளனுக்கே யான் ஆட்பட்டேன். அவனுக்கே அணி ஆரம் சூட்டுவேன். திருமாலை சூட்டித் திருமணம் பூணுவேன்.

(போகிருள்)

பெரியாழ்வார் : அப்படியே நடக்கட்டும்.......அற்புத நிகழ்ச்சி நடக்கட்டும்.......அற்புதம்; அற்புதம்; இந்த அற்புதம் நடக்குமா? இந்த அற்புதம் நடக்குமா? ஆண்டாள் விருப்பப்படியே நீ மணப்பாயோ? அவளுக்கருள்வாயா இறைவா?

(படுக்கையில் படுத்துக்கொள்கிருர்)

## காட்சி 16

இடம் : பெரியாழ்வார் வீடு

நேரம் : இரவு

உறுப்பினர் : திருமால், பெரியாழ்வார், ஆண்டாள்.

நிகழ்ச்சி : பெரியாழ்வார் கனவு.

திருமால் : விஷ்ணு சித்தரே! பட்டர்பிரானே! நீ ஐயப்பட்ட அற்புத நிகழ்ச்சி நடக்கத்தான் போகிறது. ஆம். யாம் ஆண்டாள் ஆசையை நிறைவேற்று வோம். ஆண்டாளை யாம் யாவரும் அறிய மணப்போம். உம் மகளை எம் இருப்பிடமாகிய திருவரங்கத்திற்கு அழைத்து வருக. சீரும், சிறப்பு மாக, செம்மையுற முறைப்படி பெண்ணை அழைத்து வரும்படி யாம் எனது அர்ச்சகர்களை அனுப்பி வைப்போம். அவர்களுக்கு ஆணை பிறப்பிப்போம். பெண்ணை அழைத்துக்கொண்டு நீவிரும் வருக.

பெரியாழ்வார் : (கனவினின்று விழித்தெழுந்து) மகளே! மகளே! ஆண்டாள்! ஆண்டாள்!

ஆண்டாள் : அப்பா! [ஓடிவந்து] அப்பா!

பெரியாழ்வார் : அற்புதம்! அற்புதம் நிகழும்! திருமாலே கூறிவிட்டார், உன்னைத் திருவரங்கத்திற்கு அழைத்து வரும்படி. அழைத்துப் போக அர்ச்சகர்களை அனுப்பி வைப்பதாகவும் சொல்லி விட்டார் எம்பெருமான்.

ஆண்டாள் : என் அன்பன் என்னை ஏற்றுக்கொள்வான். ஏற்றுக்கொள்வான்.

## காட்சி 17

இடம் : தெரு

நேரம் : மாலை

உறுப்பினர் : ரெங்கன், நம்பி.

ரெங்கன் : நம்பி! நீ வாழ்க!

நம்பி : நீயும் வாழ்க!

ரெங்கன் : எல்லாரும் வாழ்க! இறைவன் எல்லாரையும் வாழ வைக்கிருன். அவனை நம்பிதான் நாம் வாழ்கிருேம்.

நம்பி : நம்பி, நம்பிதான் வாழ்கிருேம்.

ரெங்கன் : நம்பி! ஓகோ...உன் பெயர் நம்பி என்று இருப்பதனுலே நம்பி நம்பிதான் வாழ்கிருேம் என்கிருயா? சீ...சீ உன் பெயரைச் சொல்லியா...சே... வேண்டாம்.

நம்பி : இந்தாப்பா உர்!

ரெங்கன் : என்ன?

நம்பி : உர்......!

ரெங்கன் : மறுபடியும் என்னைக் கேலி பண்ணுகிறியா? நம்பி! நான் நினைச்சேன். உன்னை என்ன செய்வேன் தெரியுமா?

நம்பி : உம்...அப்படி சொல்லு! என் பெயரை மீண்டும் சொல்லி விட்டாயே!

ரெங்கன் : சே...என்ன மறதி! அதற்குள் உன் பெயரைச் சொல்லி விட்டேனே.

நம்பி : அப்படியில்லே. கடவுள் பெயரைச் சொன்னுய். கடவுள் பெயரை எனக்கும் வைத்திருக்கிருர்கள். அதனுல் உன்னேயும் அறியாமல் என் பெயரைச் சொல்லித்தான் ஆக வேண்டும்.

ரெங்கன் : என்னடா இது? அடிக்கடி நாம் இப்படிச் சண்டை பிடித்துக் கொண்டிருக் கிருேம். இதே பிழைப்பா இருக்கிறது!

நம்பி : இப்படித்தான் உயிர்களெல்லாம் அடிக்கடி இறைவனேடு பகைத்துக் கொள்கின்றன!

ரெங்கன் : உயிரெல்லாம் பகைத்துக் கொள்வதில்லே. உயிரை இறைவனேடு சேர வொட்டாமல் மலம்-அழுக்கு அதாவது ஆணவமானது-தடுக்கிறது.

நம்பி : அதாவது உன்னேயும் என்னேயும் அடிக்கடி பகைக்க வைக்கிற ஆணவம் போல...

ரெங்கன் : உன்னிடம் இருக்கும் ஆணவம் போல இல்லேயா?

நம்பி : உன்னிடம் இருக்கும் ஆணவம் போல...

ரெங்கன் : அப்போ நான் ஆணவம் பிடித்து அலேகிறவஞ?

நம்பி : நான்தான் ஆணவம் பிடித்து அலேகிறவஞ?

ரெங்கன் : ஆமாம் நீதான் ஆணவம் பிடித்தவன்.

நம்பி : இல்லே நீதான் ஆணவம் பிடித்தவன்.

ரெங்கன் : நீதான்!

நம்பி : நீதான்!

ரெங்கன் : ஆ...என்ன மறுபடியும் நாம் சண்டை போட்டுக் கொள்கிருேம்!

நம்பி : ஆமாம் சே...சே...மறுபடியும் சண்டையா! வேண்டாம்.

ரெங்கன் : இனி சண்டையே வேண்டாம்!

நம்பி : ஆமாம், ஆமாம் இனி சண்டையே வேண்டாம்.

ரெங்கன் : அதற்கு என்ன நம்பிக்கை. நம்பிக்கை கொடு!

நம்பி : இந்தா...(கையை நீட்டுகிருன்)

ரெங்கன் : என்ன?

நம்பி : நம்பி, கைகொடு என்றே...

ரெங்கன் : நம்பி, கைகொடு என்றேஞ? நம்பிக்கைக் கொடு என்ருல் நம்பி; கைகொடு என்று சொன்னதாகச் சொல்ருன் என்ன செய்றது...உம்...

நம்பி : நாம் இருவரும் இனிமேல் ஒன்று.

ரெங்கன் : ஆமாம் நாம் ஒன்று.
[கட்டி அணேத்து, கன்னத்தோடு கன்னம் மோதி நெற்றியோடு நெற்றி மோதிக் கொள்ள ரெங்கன் நெற்றியிலிருந்த நாமம் நம்பி நெற்றியில் பெயர்ந்து ஒட்டிக் கொள்கிறது. ஒருவர் முகத்தைப் பார்த்து ஒருவர் சிரிக்கின்றனர். சிறிது சிறிதாக சிரிப்பு அதிகமாகிறது. சிரித்து அசந்து போய்]

ரெங்கன் : என் நாமம் உன் நெற்றியில் ஒட்டிக் கொண்டது. என் திருமண் உன் நெற்றியில் ஒட்டிக் கொண்டது.

நம்பி : ஒட்டிக் கொண்டது இல்லேயா?

ரெங்கன் : உம்.

நம்பி : உன் நெற்றியிலிருந்த திருமண் என் நெற்றியிலே பெயர்ந்து ஒட்டிக் கொண்டது. இப்போ தெரிந்து கொள் ரெங்கா!

ரெங்கன் : என்ன தெரிந்து கொள்ள வேண்டியிருக்கு?

நம்பி : சொல்கிறேன் கேள்.

ரெங்கன் : சொல்.

நம்பி : ஆணவத்தை அறவே ஒழித்து விட்ட உயிர் [கையால் ரெங்கன் நெற்றியையும் தன் நெற்றியையும் காட்டி] ஆண்டவனோடு சேர்ந்து விடுகிறது. வைகுந்தமே அடைந்து விடுகிறது. பேரின்ப வாரியில் திளைக்கிறது. பெருமிதம் கொள்கிறது.

ரெங்கன் : ஆமாம், ஆமாம்; இனி நாம் ஒன்றாக இணைந்து விடுவோம்: நானே சரணடைந்தேன். (நம்பியின் காலில் விழுந்து வணங்க, நம்பி திருமால் போல் நின்று அபயம் அளிக்கிறான்.)

## காட்சி 18

இடம் : திருவரங்கம்-திருவரங்கநாதர் கோயில்

நேரம் : காலைப்போது

உறுப்பினர் : திருமால், ஆண்டாள், பெரியாழ்வார், அர்ச்சகர்கள், ரெங்கன், நம்பி.

(விட்டுணு சித்தரும், ஆண்டாளும் அர்ச்சகர்கள் புடை சூழ மங்கல இசை முழங்க இறைவன் திருமுன்பு வருதல்]

பெரியாழ்வார் : எம்பெருமானே! எல்லாம் வல்ல திருமாலே! கார் வண்ணனே! கருணைக் கடலே! பாம்பணைப் பரமனே! திருவரங்கத்து அம்மானே! நீ பணித்தவாறே அடியேன் என் மகள் ஆண்டாளை அழைத்து வந்தேன். இதோ... சூடிக் கொடுத்த சுடர்க்கொடி! பாடிப் பயின்ற பைந்தமிழ் ஆண்டாள்! நாடித் திருமொழி பாடிய பாவை! ஏற்றுக் கொள்க! ஏந்தலே, ஏற்றுக் கொள்க. [ஆண்டாள் திருவரங்கத்தம்மான் திருவடியருகே சென்றதும் உருவம் மறைந்து கால் முதல் ஏறி வயிறு வழி சென்று நெஞ்சில் தங்குகிறாள். உடன் திருமால் காட்சி அளித்து]

திருமால் : பட்டர்பிரானே! எனது மாமனாரே! மலர்க்கொடி போன்ற சூடிக் கொடுத்த நாச்சியாராம் ஆண்டாள் தம் விருப்பம் போல் சிலநாள் எம்மைப் பிரிந்து உன் மகளாய் வளர்ந்து இன்று எம்மை வந்து சேர்ந்தாள். எல்லாரும் இனிது வாழ்வீராக.

பெரியாழ்வார் : மருமகன் முறை கொண்ட மால்வண்ணா! மன்னுயிர் நற்பேறு பெறுவதற்கு நாளும் காட்சியளிக்கிறாய். யானும் மகிழும் பேறளித்த பெருமானே! இனி யான் செய்ய வேண்டுவது யாதோ?

திருமால் : மாமனாரே! மகிழ்வுடன் திருவில்லிப்புத்தூரில் வடபெருங் கோயிலில் எழுந்தருளியுள்ள எமக்கு எப்போதும்போல் பெரியாழ்வார் என்னும் பெயரோடு திருத்தொண்டு செய்து வருக. அமைதியோடு அனைவரும் உய்க.

பெரியாழ்வார் : (பாடுகிறார்) பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரமும்
மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா—உன் செவ்வடி செவ்வித்
திருக்காப்பு.

(முற்றிற்று)

# “சேரநாட்டு வழிபாட்டு முறைகள்”

ஏ. ஏகாம்பரநாதன், எம்.ஏ.,
சென்னைப் பல்கலைக் கழகம்

எங்கும் நீக்கமற நிறைந்த பரம்பொருளின் அருளைப்பெற பல்வேறு வழி வகைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று இறைவனுக்குக் கோயில் கட்டி அதில் இறைவனின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து வழிபாடு செய்த லாகும். இறைவனை வழிபடக் கோயிலுக்கு பல்வேறு மனநிலையுடைய மக்கள் வருதலால் நெறிமுறைகள், கட்டுப்பாடுகள் முதலியன வகுக்கப் படவேண்டிய நிலை உருவாயிற்று. இறை வழிபாடு செய்யும்போது மனம் ஒரு நிலைப்பட வேண்டும் என்ற காரணத்தாலும் மக்களிடம் நல்லொழுக்கம் மேம்படவேண்டும் என்பதாலும் சில நெறிமுறைகளைக் கடைப் பிடித்தல் சாலச் சிறந்தது எனப் பெரியோர் கருதுகின்றனர். இறைவனை வழிபட வருவோர் மட்டுமின்றி பூசைசெய்பவர்கள், கோயிலிலுள்ள பிற பணி மக்கள் முதலியோரும் சில நெறி முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என பண்டைக் காலத்திலிருந்தே வலியுறுத்தப் பட்டுள்ளது. இப்பகுதியில் சேர நாட்டுக் கல்வெட்டுகளிலிருந்தும் செப்பேடுகளிலிருந் தும் அறியப்படும் வழிபாட்டு முறைகள் முதலிய செய்திகளைக் காண்போம்.

ஆகம முறைப்படி வழிபாடு :

ஆகமங்களில் கோயில் கட்டும் முறை, வழிபாட்டு முறை, அவ் வழிபாட்டின்போது கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள், இன்ன பிற செய்திகள் காணப்படுகின்றன. பண்டைக் காலத்தில் ஆகம முறைப்படியே கோயில்களில் வழிபாடு நடத்தப்பட்டுள்ளமையைக் கல் வெட்டுகளின் வாயிலாக அறிய வருகிறோம். பண்டைய சேர நாட்டின் தென் கிழக்குப் பகுதியிலுள்ள தென்காசி என்னும் தலத்தி லுள்ள சிவன் கோயில் கல்வெட்டொன்று, விசுவநாதப் பெருமாளுக்குக் கட்டப்பட்ட அக்கோயிலில் “நல்லாகமவழி நைமித்தமுடன் எல்லா பூசையும்புரையற” நடத்தப்பட்டதாகக் கூறுகிறது. (1) இக்கோயிலிலுள்ள மற்றொரு கல்வெட்டில், “சாத்திரம் பார்த்திங்கியான் கண்ட பூசைகள்தாம் நடாத்தியேத்தியன் பால் விசுவநாதன் பொற்கோயில்”, எனக் குறிப்பிடப் பட்டுள்ளது. (2) இக் கல்வெட்டுகளில் எவ்வாறு பூசைகள் நடத்தப்பட்டன என விரிவாகக் கூறப்படவில்லையாயினும், ஆகம முறைப்படி வழிபாடு செய்யப்பட்டது என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

வழிபாட்டு நெறிமுறைகள் :

திருவல்லம் திருமால் கோயிலிலுள்ள செப்புப் பட்டயம் ஒன்று அர்ச்சகர்கள் பூசை செய்யும் போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங் களைப் பற்றிக் கூறுகிறது. இவர்கள் பூசை செய்யும்போது கஞ்சிப்புடவை (கஞ்சியில் நனைத்த) உடுத்தல் கூடாது. பூசை சமயத்தில் பவித்திரம் என்னும் அணியினை அணிந்தாக வேண்டும். வழிபாட்டின்போது நெய்வேத்தி யம் படைத்தல் வேண்டும். மேலும் இறைவனை மலரிட்டு, சந்தனம் படைத்து அருச்சனை செய்ய வேண்டும். இறைவன் முன்னிலையில் வெற்றிலையுண்ணுதல் தகாத செயலாகும். கி. பி. 12-ம் நூற்றுண்டிற்கு முற்பட்ட இப் பட்டயத்தில் காணும் நெறிமுறைகளை இக் கோயிலில் வாழ்ந்த நிரஞ்சன பாத பட்டாரகர் என்பவர் வகுத்ததாக அறிய வருகிறோம்.(3)

இக்கோயிலிலுள்ள மற்றுமொரு செப்புப் பட்டயத்தில் சில சுவையான செய்திகள் கூறப்பட்டுள்ளன. இக்கோயிலில் பந்திரடி என்னும் பூசை காலையில் விடிந்த ஐந்து நாழிகைக்குள் தொடங்க வேண்டும். மேலும் பூசை தொடங்கிய மூன்று நாழிக்கைக்குள் வழிபாடு, பிற சடங்குகள் அனைத்தும் முடித் தாக வேண்டும். வழிபாட்டிற்கு முன்னர் இறைவனைப் பன்னிரு குடம் தண்ணீரால் நீராட்ட வேண்டும். இந்நீராட்டு வைபவத் தின் போது ஐந்து வாத்தியக்காரர்கள் இசை முழக்க வேண்டும். பின்னர் 12 நாழி அரிசி யால் தயார் செய்த திருவமுது, 4 ஆழாக்கு அரிசியால் செய்யப்பட்ட நெய்யமுது, மூன்று கழஞ்சு சந்தனம், ஒரு வெள்ளை நிற மாலை முதலியன படைத்து வழிபட வேண்டும். பூசை

(1) TAS Vol. I. p. 91 (2) TAS Vol. I. p-94 (3) TAS Vol. III pp. 31-32

முடிந்த பின்னர் திருப்புகை காட்டியவாறே சந்தனம், பூ, தேங்காய் முதலியவைகளை வேதம் பயிலும் சாத்திரர்களுக்கு வழங்க வேண்டும். இவ்வழிபாட்டு முறையில் தவறேதும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அருச்சகர்கள் கடமையாகும்.(4)

திருக்கடித்தானம், திருமால் கோயிலிலுள்ள கி. பி. 10-ம் நூற்றுண்டு கல்வெட்டொன்றும் வழிபாட்டு முறைகளைப் பற்றிய செய்திகளைக் கூறுகின்றது. இக் கோயிலில் நியமிக்கப்பட்ட ஐந்து பணியாட்கள் பஞ்சமகாசப்தம் என்னும் வாத்தியத்தை இறைவனை நீராட்டும் போதும் அவ்வாத்தியத்தை நான்குபேர் ஸ்ரீபலி செய்யும்போதும் ஒலித்தல் வேண்டும். இவ்வாத்தியம் இசைப்போர் எல்லாம் நாட்களிலும் ஒவ்வொரு பூசைக்கும் தவறுது ஒலித்தல் வேண்டும்.(5)

கொல்லூர் மடத்திலுள்ள உதைய மார்த்தாண்டவர்மன் காலச் செப்பேடு ஒன்றில் (கி. பி. 1188), எல்லா நாட்களிலும் இரவு ஸ்ரீபலி முடிந்தபின் கோயிலின் கருவறையை நன்ருகச் சுத்தம் செய்துவிட்டு, இரண்டு நெய் விளக்குகளை மட்டிலும் எரிய விட வேண்டும் எனவும், அதன் பின்னர்தான் கருவறையைப் பூட்டி, சாவியைக் கோயிலைக் கண்காணிக்கும் புறப்பொதுவாளிடம் கொடுக்க ·வேண்டும் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.(6)

வழிபாட்டில் பங்குகொள்வோர் :

இறை வழிபாட்டின்போது கோயிலில் பணிபுரிவதற்காக நியமிக்கப்பட்டோர் அனைவரும் பங்கு கொள்ள வேண்டும். திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி கோயிலில் வழிபாடு நடத்தும் போது இறைவனுக்கு மாலைகள் கட்டிக் கொடுப்பவர்களும், வாத்தியங்கள் இசைப்பவர்களும், கோயிலைக் காவல் புரிபவர்களும், பணிப் பெண்டிரும் கோயிலில் இருந்தாக வேண்டும் என கி. பி. 1168-ம் ஆண்டு கல்வெட்டொன்று குறிப்பிடுகிறது.(7) மேலும் வழிபாட்டின் போது இறைவனின் திருவுருவத்தைக் கோயில் விளாகத்துள் பிராமணர் மட்டும் தான் சுமந்து செல்ல வேண்டும் எனவும் வலியுறுத்தப்பட்டுள்ளது.(8)

வழிபாட்டு செலவும், பிற செலவுகளும்

திருக்காக்கரை திருமால் கோயிலில் தினமும் 6 நாழி அரிசி படையமுதிற்கும், 2 நாழி அரிசி பூத பலிக்கும் செலவிடப்பட்டுள்ளது. இவையன்றி, கோயிலுக்குத் தேவையான விறகுகளைக் கொடுப்பவர்களுக்கு 2 நாழி அரிசியும், அரிசி குற்றுபவருக்கு ஒரு நாழியும், அருச்சகர்களுக்கு 10 காணம் பொன்னும் கோயிலிலிருந்து தினமும் கொடுக்கப்பட்டுள்ளது.(9)

பெருநெய்யிலிலுள்ள பெருமாள் கோயிலில் தினம் மகாபாரதம் படிப்பவர்களுக்கும், இக்கோயிலில் உள்ள பிராமணர்களுக்கு உணவளிப்பதற்கும் ஆண்டிற்கு 40 கலம் நெல் செலவிடப்பட்டுள்ளது.(10) மேலும் இக்கோயிலில் நடைபெறும் பத்து நாள் திருவிழாவின் போது தினம் 100 பிராமணர்கள் வீதம் 1000 பிராமணர்களுக்கு உணவளிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.(11) சேர நாட்டிலுள்ள பல கல்வெட்டுகளில் இவ்வாறு கோயில் வழிபாட்டிற்கும், பிராமணர்களுக்கு உணவளிப்பதற்கும், திருவிழா கொண்டாடுவதற்கும், கோயிலில் பணிபுரிபவர்களுக்கும் கோயிலின் வருமானத்தைக் கொண்டே செலவுகள் செய்யப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

கட்டுப்பாடு

கோயில்களில் அருச்சகர்களும் பிற பணியாளர்களும் கோயில் விதி முறைகளுக்குள் அடங்கி நடக்க வேண்டுமெனத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு உள்ளன. திருக்கடித்தானம் திருமால் கோயிலிலுள்ள அருச்சகர்களையும் அவர்களுக்குப் பணிபுரிய நியமிக்கப்பட்ட உதவியாட்களையும் தானத்திற்கும், பரடைக்கும் (சபை போன்ற அமைப்பு) பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கக் கூடாது.(12) திருக்காக்கரை கோயிலிலுள்ள அருச்சகர்கள்

(4) TAS Vol. II pp. 173-175 (5) TAS Vol. V. No. 55 (6) TAS Vol. IV. No .7 (7) TAS Vol. V. No. 24 (8) TAS Vol. III. p. 175. (9) TAS. Vol. III pp. 186-188. (10) Epi. Indica Vol. 18, No. 440 (11) TAS Vol. V. p. 35. (12) TAS Vol. II p p. 34-37.

நாடாள்பவருக்குப் பணம் கடனாக வழங்கினால் பூசை செய்வதற்குரியவர்களாக ஏற்றுக் கொள்ளப்படமாட்டார்கள்.(13) மேலும் இக்கோயில் அருச்சகர்களோ, அல்லது பிற பணியாட்களோ கோயிலுக்குச் சொந்தமான பணத்தைப் பிறர் எவருக்கும் கடனாகக் கொடுத்தல் கூடாது. இக்கட்டுப்பாட்டினை மீறி நடப்பவர்கள் தண்டனை பெறுவதற்குரியவராவர். (14)

வழிபாட்டு முறைகளில் தவறினால் தண்டனை :

சேர நாட்டுக் கோயில்களில் காணப்படும் எண்ணிறந்த கல்வெட்டுகளில் கோயில் நெறி முறைகளை ஒழுங்காகக் கடைப்பிடிக்காத அருச்சகர்களும், பணிமக்களும், கோயிலைக் கண்காணிக்கும் அதிகாரிகளும் தண்டனைக் குரியவர்களாவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளதைக் காணலாம். திருவல்லம் கோயிலைச் சார்ந்த அருச்சகர்கள் தினமும் சரிவர பூசைகள் செய்யாவிட்டால் 24 காணம் பொன் தண்டனைக்கு ஆளாவர் என்றும், கோயிலில் பணிபுரியும் பிறர் முறை தவறி நடந்தால் 24 நாழி அரிசி அபராதமாகச் செலுத்த வேண்டும் எனவும் கல்வெட்டொன்று கூறுகிறது.(15) மேலும் இக்கோயிலில் இசை முழக்குவோர் யாராவது வழிபாட்டின்போது இல்லை என்றால் கால் காணம் பொன் தண்டனையாகச் செலுத்த வேண்டும்.(16) திருக்கடித்தானம் கோயிலில் இசை வாசிப்பவர்கள் ஒரு முறை தவறு செய்தால் 2 நாழி நெல்லும், ஒருநாளில் நடைபெறும் எல்லா பூசைகளுக்கும் இசை முழக்கத் தவறினால் 2 நாழி நெல்லும், ஒரு நாழி எண்ணெயும் கோயிலுக்குக் கொடுத்தாக வேண்டும். (17) திருக்காக்கரை கோயிலிலுள்ள அருச்சகர்கள் தினமும் பூசைகள் தவறாது நடத்தும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றனர். ஒருமுறை சரிவர பூசை செய்யாவிடினும் தண்டனை பெறுவதற்குரியவராவார்கள். இவர்கள் ஐந்து நாட்கள் தொடர்ந்து சரிவர வழிபாடு நடத்தாவிட்டால் 15 கழஞ்சு பொன் அபராதம் செலுத்தியாக வேண்டும்.

சேர நாட்டிலுள்ள கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகள், செப்புப் பட்டயங்கள் இவற்றை ஆராயுமிடத்து சிவன் கோயில்களைக் காட்டிலும் வைணவக் கோயில்களில்தான் கட்டுப்பாடுகள் அதிகம் இருந்தன என்பது நன்கு புலனாகும். இக் கட்டுப்பாடுகள், நெறிமுறைகள் முதலியன கோயில் வழிபாட்டில் ஒழுங்கின்மை ஏற்படக் கூடாது என்ற நல்லெண்ணத்தில்தான் உருவாக்கப் பட்டிருக்க வேண்டும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

(13) TAS Vol. III. pp. 177-179. (14) TAS Vol. III pp. 174-175. (15 )TAS Vol. III, pp. 32-33. (16) TAS. Vol. II pp. 173-175. (17) TAS Vol. V. No. 55. (18) TAS. Vol. III pp. 187-188.

---

# அடிகளாரின் அருளமுதத்தில் சில துளிகள்

கடவுள் நாம் படைக்கும் படையலை உண்பதில்லை; நாமும் கவலைப்படுவதும், ஏன் என்று கேட்பதும் இல்லை. தனது குழந்தைகளில் ஒன்று பட்டினியாக இருக்கத் தாய் உண்பாளா? அதுபோலவே எல்லா உயிர்களுக்கும் தாயாகவுள்ள அம்மையப்பன், அவனது உலகில் ஒரு சிறு உயிர் பட்டினியிருக்க நேரிட்டாலும் உண்ண மாட்டான். பன்றி குட்டிகளுக்குக்கூட உணவளித்தவனல்லவா, அவன். பசிப்பிணி இல்லாத உலகில்தான் உண்பான்.

சாப்பிடும் இலையில் சிறிது உப்பு, புளி, அரிசி, கடுகு, காய்கறிகள் இவற்றைப் படைத்து ''சாப்பிடு'' என்றால் நாம் சாப்பிட முடியுமா? அவற்றில் சுவையே கிடையாதா? பின் ஏன் சாப்பிட முடியவில்லை. அவைகள் பக்குவப் படுத்த வேண்டும். அதன் பெயர் தானே சமையல். அப்போதுதான் முரண்பட்ட வெவ்வேறு சுவைகள் நற்சுவையாக மாறும். அதுபோலவே முரண்பாடான பல குணங்களைக் கொண்ட மனிதர்களை ஒன்றுசேர்த்துப் பண்படுத்துவதுதான் சமயம்.

# திருமுறை அறிமுகம்

## (4)

மாமன்னன் இராசராசன் தான் தஞ்சையில் எழுப்பிய பெரிய கோயிலில் தேவாரத் திருப் பதிகங்கள் நாடோறும் ஓதுதற்கென்று பெரிய தோர் ஏற்பாடு செய்து அதற்கென நிவந்தங் கள் வகுத்திருந்தான். இதனை அறிவிக்கும் கல்வெட்டொன்று தஞ்சைப் பெரிய கோயிலில் இன்றுமுள்ளது. அப்பெருவேந்தன் ஏற்படுத் திய ஏற்பாடு இன்று நடைமுறையினின்றும் மாறிவிட்ட போதிலும் அவ்வேற்பாட்டு மாட்சி யினைக் கல்வெட்டு காட்டி நிற்கின்றது. பெருவுடையார் முன் தேவாரத் திருப்பதிகம் விண்ணப்பம் செய்வதற்கு நாற்பெத்தெட்டு பாடகர்களும், அவர்களோடு உடுக்கையும் கொட்டி மத்தளமும் வாசிப்பதற்கு இரண்டு பேர்களுமாக ஐம்பது பேர்களை நியமனம் செய்திருந்தான் இராசராசன். அப்புனிதப் பணி இடையில் தடைப்படாது தொடர்ந்து நடைபெறுவதற்காக அப்பெருவேந்தன் செய் துள்ள மாற்றுள் ஏற்பாடு திருமுறை ஓதப் பெறுவதில் இலங்கும் புனிதத் தன்மையையும், அதன்பால் அவன் கொண்டிருந்த ஆர்வத்தை யும் காட்டுகின்றது. திருமுறை ஓதும் பணிக் கென ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஆட்களின் பெயர்களை நோக்கும்போது அவர்கள் திரு முறைகளை ஓதுவதற்கான தகுதியாகத் தீட்சை பெற்றிருந்ததுபோன்ற செய்திகள் புலனு கின்றன.

தேவாரம் முதலான திருமுறைகளைப் பண்ணோடிசைத்து வழிபாடு செய்யும் வழக்கம், செல்வாக்குப் பெற்ற நிலையில், சிவாலயங் களில் திருமுறை வரைந்த ஏடுகளை ஓரிடத்தே வைத்து அவற்றையும் வழிபாடுசெய்யும் மரபு தோன்றலாயிற்று. அவ்வாறு திருமுறைகள் வைக்கப்பெற்று வணங்கப்பெற்ற இடங்கள்– திருமண்டபப் பகுதிகள், திருமுறைக் கோயில் கள் எனப் போற்றப்பட்டன. பெரிய திருக் கோயில்களில் திருமுறைகளைச் சேமித்து வைத்து வழிபடுவதற்கு வாய்ப்பாக அமைந்த மண்டபம் திருக்கைக்கோட்டி எனப்பட்டது. அத் திருக்கைக்கோட்டியில் திருமுறை ஓதுவார் களுக்கு உணவளிக்க இறையிலி நிலங்கள் அளிக்கப்பட்ட செய்திகளைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. திருஞானசம்பந்தப் பெருமான் தோன்றியருளிய சீர்காழிப்பதியி லுள்ள சம்பந்தர் திருக்கோயிற் கருவறையி லமைந்துள்ள கல்வெட்டு திருக்கைக் கோட்டி மண்டபம் பற்றிய பல உண்மைகளை விளக்கு கின்றது. திருமுறைகளை ஓதவும், வைத்து வழிபடவுமான இடங்களாக அம்மண்டபம் பயன்பட்டதோடு திருமுறை ஏடுகளில் அவ்வப் போது சிதலமுற்றன நீக்கி, புதியன வரைந்து கொண்டு போற்றுதற்கான இடமாகவும் விளங்கிய உண்மையினை இக்கல்வெட்டு உணர்த்துகின்றது. சிதைந்த ஏடுகளைத் திருத்தி எழுதுபவர்கட்கும் நிலக்கொடை அளித்துப் புரந்த செய்தியினை அக் கல் வெட்டால் அறியலாம்.

முதல் ஏழு திருமுறைகளா யமைந்துள்ள மூவர் திருப்பாடல்களும் தேவாரம் என்னும் பெயரால் வழங்குகின்றன. திருஞானசம்பந் தரின் பதிகங்கள் திருக்கடை காப்பு என்றும், திருநாவுக்கரசர் பதிகங்கள் தேவாரம் என்றும், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பதிகங்கள் திருப் பாட்டு என்றும் தனித்தனிச் சிறப்புப் பெயர் களால் வழங்கப்பட்ட மரபும் உண்டு. பின்னரே அம்மூவர் முதலிகளின் பதிகங்கள் அனைத்தை யும் தேவாரம் என்னும் பொதுப் பெயரால் சுட்டும் வழக்கம் உண்டாகியது.

தேவாரம் என்னும் பெயர்ப் பொருளைப் பல வகையில் அறிஞர்கள் விளக்கிக் காட்டி யுள்ளனர். அதனைத் தே+ஆரம் எனப் பிரித்துத் தெய்வத் தன்மை பொருந்திய பாமாலை என்றும், தெய்வத்திற்குச் சூட்டப் பட்ட பாமாலை என்றும் பொருளுரைத்தனர். ‘அம்பலத்தில் ஆடுகின்ற அரசே என் அலங்கல் அணிந்தருளே’ என்னும் வேண்டு கோளில், செய்யுட்டொகுதி பாமாலை என்னும் கருத்தில் ஆளப்பட்டுள்ளதை அறியலாம். மேலும் தேவாரம் என்பதனைத் தே+வாரம் எனப் பகுத்துத் தெய்வத்தின்மீது பாடப்பட்ட இசைப்பாடல் என்று பொருள் கூறுவதும் உண்டு. இச்சொல்லுக்குப் போற்றப்படுவது என்ற பொருளும் கூறப்படுகின்றது. இப் பொருளில் தேவார தேவர் என்னுந்தொடர் பழங் கல்வெட்டுகளில் ஆளப்பட்டுள்ளது. “பெரிய பெருமானுக்குத் தேவார தேவராகப் பித்தளையால் எழுந்தருளுவித்த சந்திரசேகரர் திருமேனி ஒன்று” என்னும் தொடர் முதல்

முனைவர் அ.மா. பரிமணம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.

இராசராசன் காலத்திலெழுந்த ஒரு கல்வெட்டில் இடம் பெற்றதாகும். தேவார்ஹம் என்னும் வடமொழித் தொடரின் திரிபே தேவாரம் என்று கூறுவோரும் உண்டு. மலையாளத்தில் தேவாரம் என்னும் சொல் பூசையைக் குறிப்பதாகச் சொல்லப்படுகின்றது. நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு விளக்கவுரை எழுதிய உரையாசிரியர் தேவாரம் என்பதற்கு இல்லங்களில் வைத்துப் பூசிக்கப்படுவது என்னும் கருத்தில் கிருகார்ச்சை என்று பொருள் வரைந்துள்ளார்.

தொடக்கத்தில் தேவாரம் என்பது இசைப் பாடல் என்னும் அடிப்படையில் அமைந்த பெயராகக் கொள்வது ஏற்புடைத்தாகத் தெரிகின்றது. சங்ககாலத்தில் பரிபாடல் போலும் இசைப்பாடல்களால் தெய்வம் பரவும் வழக்கு இருந்தது. ஆசிரியம், கலிபோன்ற பாக்களால் இறை வாழ்த்தியம்பும் மரபும், பரிபாடலால் இறையல்லாத பொருளைப் பாடும் மரபும் இருந்து வந்ததனைச் சங்கத் தொகை நூல்கள் அறிவிக்கின்றன. பாவினங்கள் பல்கிய நிலையில் அப் பாவினங்களிற் பல இசையொடு பாடுவதற்கேற்ற வடிவங்களா யமைந்தன. இப் பாவினங்கள் பல்கிய சங்கமருவிய காலத்தில் தெய்வத்தைப் பாடுதற்கென்று அமைந்த இசைப்பாடல்களை வாரம் என்று வழங்கும் வழக்கம் தோன்றியது. இதனைச் சிலப்பதிகாரத்திற்கு வரையப்பட்ட பண்டை உரையாசிரியர்கள் தம் உரைக்குறிப்புக்களால் உணரலாம்.

தேமதுரத் தமிழ்ப்பாக்களிலமைந்த தெய்விகத் தமிழிசை கேட்டார்ப் பிணித்துக் கேளாரை வேட்கை கொள்ளச் செய்தது. வாரம் என்பது பழந்தமிழ் இசைப் பாடல்களில் ஒரு வகையாகும். சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லாரும், அரும்பதவுரையாசிரியரும் வாரம் என்பதனை விளக்குமிடத்து அது. மிகவும் தாழ்ந்த செலவும், மிக முடுகிய நடையினையும் இன்று இடைப்பட்ட பாடல் என்றும் அது சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் உடையது என்றும் குறிப்பிட்டுள்ளார்கள். (சிலம்பு–அரங்கேற்று–67) பிறிதோரிடத்தில் வாரம் என்பதற்குத் தெய்வப்பாடல் என்றும் பொருள் கூறியுள்ளனர். (சிலம்பு–அரங்கேற்று–136) இவற்றால் வாரம் என்பது முதற்கண் இசைப் பாடலையும், பின்னர்த் தெய்வம் சுட்டிய இசைப் பாடலையும் குறித்தது என்று கொள்ளலாம். காலத்தின் தேவையை நிறைவேற்றித் தமிழகத்தில், இறையுணர்வடிப்படையில் சமய மறுமலர்ச்சியைத் தோற்றுவிப்பதற்குத் தோன்றிய தெய்வ மணங்கமழும் பாடல்களை, ‘இனிய தெய்வப் பாடல்கள்’ என்னும் பொருளில் தேவாரம் என்று வழங்கினர் எனக் கருதுவது ஏற்புடைத்தாகும். தேமா என்பது போலத் தேவாரம் என்பதில் தே இனிமையைக் குறிக்க, வாரம் தெய்வப் பாடலைச் சுட்டுகின்றது. வாரம் என்பதற்கு அன்பு என்னும் பொருள உண்மை கொண்டு, தெய்வ அன்பில் விளைந்தது என்றும், தெய்வ அன்பினை விளைப்பது என்றும் கொள்ளும் வகையில் தேவாரம் என்று பெயர் எழுந்தது எனவும் கருத்துரைக்கலாம்.

தேவாரப் பாக்கள் திருக்கோயில்களில் பாடும் வழக்கம் தழைத்தபின் அதனைப் பாடுவோர் சில முறைகளைப் பின்பற்றலாயினர். கோயில் என்னும் சொல் ஊர்கள்தோறும் இறைவன் எழுந்தருளியுள்ள ஆலயத்தைக் குறிப்பதாயினும் சைவ உலகில் இச்சொல் தில்லைச்சிற்றம்பலமுடையார் ஆனந்த நடனமிடும் திருக்கோயிலையே குறிக்கும். கோயில் விருத்தம், கோயில் நான்மணிமாலை முதலியன தில்லைப் பெருமான்மீது பாடிய பாத்தொகுப்புக்களையே சுட்டும். இறைவன் வீற்றிருக்கும் இடங்களின் மேலெல்லை, கீழ் எல்லைகளை வகுத்துக் காட்டுவார்போல மணிவாசகப் பெருமான் ‘சிறைவான்புனல் தில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும் உறைவான்’ என்று கூறியுள்ளார். என்று வந்தாய் என்னும் அருள்திருக் குறிப்போடு, இறைவன் ஆடிக்கொண்டிருக்கும் சிற்றம்பலத்திற்குத் தனித்ததோர் சிறப்புண்டு. அதனால், இதயத்துள்ளே இறைவனை இயைவித்துக் கொள்ளுமாறு, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கித் தேவாரப்பதிகங்களை ஓதுபவர்கள் பதிகத்தின் தொடக்கத்தில் திருச்சிற்றம்பலம் எனக் கூறித் தொடங்கி இறுதியில் திருச்சிற்றம்பலம் என முடிக்கும் மரபு போற்றினர். காலச் சுருக்கம் கருதிப் பதிகத்தின் முதற்பாடலையும் இறுதிப் பாடலையும் மட்டும் பாடும் காலத்திலும் இம்மரபு காக்கப்பட வேண்டும்.

நித்திய நைமித்திக பூசைக் காலங்களில் திருமுறை ஓதப்படும் வழக்கம் தோன்றிய போது, தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் ஆகிய திருமுறைப் பகுதிகளிலிருந்து பாடல்கள் ஓதும் முறை அமைந்தது. இது பஞ்சபுராணம் ஓதுதல் என்று கூறப்படுகின்றது. இங்குப் புராணம் என்பது, ‘தொடுக்கும் கடவுட் பழம் பாடல்’ என்றது போலப் பழமையான பாடல் என்ற பொருளில் வழங்குகின்றது. தமிழகத் திருக்கோயில் வழிபாட்டு மரபில் வடமொழிச் செல்வாக்குக் கால்கொண்டபொழுது பூசையில் வடமொழி வேதப் பாடல்கள் பாடிய பின்னரே, திருமுறைப் பாடல்களைப் பாடும் நிலை தோன்றியது. அவர்கள் திருமுறை ஓதுவதனைத் திராவிட வேதங்கூறல் என்றனர்.

பன்னிரு திருமுறைப் பனுவல்கள் அனைத்தும் ஒத்த பெருமையினவே யெனினும், தேவாரமும் திருவாசகமும் தனிச் செல்வாக்குடன் திகழ்கின்றன. பிறகாலத்தில் வடமொழி வேதப் பயிற்சிக்கென வேத பாடசாலைகள் தோன்றியது போலத் திருமுறை பயிற்சிக்குத் 'தேவாரபாடசாலை' என்ற பெயரில் பள்ளிகள் பல தோன்றின.

மெய்கண்டார் முதலான சந்தான குரவர்கள் என்னும் கார்மேகங்கள் பொழிந்து பெருகிய சைவ சித்தாந்தப் பெருவெள்ளம், சிவஞான போதம் முதலிய சித்தாந்த சாத்திரங்கள் என்னும் எழிலும் பயனுமிக்க ஞான நீர்த் தேங்களாக விளங்குகின்றது. அப்பர் சுவாமிகள் இறைவனைக் குறிக்கும்போது 'ஏரி நிறைந்தனைய செல்வன்' என்கின்றார். அந்த இறைவன் உண்மையை உணர்த்தும் சைவ சாத்திரங்களும் ஏரி நிறைந்தனைய செல்வங்களாகவே திகழ்கின்றன. இந்த ஞானப் பனுவல்களில் விளங்கும் சைவ சித்தாந்த சாத்திரக் கூறுகள் பொதுவாகத் திருமுறைகளில்-குறிப்பாக நால்வர் திருவாக்காகிய தோத்திரப் பனுவல்களில் இலைமறை காய்களென இலங்கக் காணலாம்.

தேவாரப்பாக்கள் பல ஆயிரக் கணக்கில் பரந்து கிடத்தலின் முழுதும் கற்றலருமையும், காலச் சுருக்கமும் கருதி அகத்தியர் தேவாரத் திரட்டு, அற்புதத் தேவாரத் திரட்டு முதலிய திரட்டு நூல்கள் தோன்றியதுபோலப் பன்னிரு திருமுறைகளின்றும் திரட்டித் தொகுத்த நூல்களும் தோன்றலாயின.

தேவாரப்பாடல்கள் பண்கள் அடிப்படையில் பாடப்பட்டனவாதலின் அவற்றைத் திருமுறைகளாக வகுக்க முற்பட்டபோது, அவற்றில் இடம் பெற்ற பண்களின் முறையினையே பின்பற்றிப் பதிகங்களைத் தொகுத்தனர். அவ்வகையிலமைந்த பதிப்பு பண் முறைப்பதிப்பு எனப்பட்டது. ஒரு பயன் நோக்கிக் கோயில் எனப்படும் தில்லைத் தலத்தினை முதலாகக் கொண்டு, தலங்கள் வரிசையில் பதிகங்களை ஒழுங்குபடுத்தி வெளியிடப்பட்ட பதிப்பு தலமுறைப் பதிப்பு எனப்பட்டது. இப்போது, தலமுறையில் மூவர் பாடல்களும் ஒருங்கிணைத்து ஒரே நூலாகவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

மீண்டும் தமிழகச் சிவாலயங்களில் திருமுறை வழிபாட்டினை மலரச் செய்யவும், தமிழ் மக்கள்பால் திருமுறைத் தெளிவினை உண்டாக்கவும். அருள்நெறித் தந்தை தவத்திரு அடிகளார் முயற்சியால் அரிதின் தோன்றி ஒளிரும் தமிழ்நாடு தெய்விகப் பேரவை முயன்று வருகின்றது.

---




## புனிதவதியார்

சோழநாட்டில் கடற்கரைப் பட்டினம் காரைக்கால். அங்கு தனதத்தன் என்ற பெருவணிகர் வாழ்ந்தார். அவர் செய்த தவத்தின் பயனாக 'பொங்கிய பேரழகு மிகப் புனிதவதியார்' என்ற பெண்மகவு பிறந்தது. குழந்தையாக விளையாடும்போது சிவபெருமான் திருவார்த்தைகளையே பேசும். மணப்பருவம் எய்தியது. துறைமுக நகரான நாகபட்டினத்தைச் சேர்ந்த பரமதத்தன் என்பவருக்கு மணஞ்செய்து கொடுத்தார். காரைக்காலிலேயே அவர்கள் இல்லறம் நடத்த மாளிகையொன்று அமைத்துக் கொடுத்தார். பரமதத்தன் வாணிபத்தில் ஈடுபட்டார். ஒருநாள் அவரைப் பார்க்கவந்தவர்கள் இரண்டு மாங்கனிகள் கொடுத்தனர். அதை வீட்டிற்கு அனுப்பி வைத்தார். அன்று முற்பகலில் அடியவர் ஒருவர் மிகப் பசியுடன் வந்து சேர்ந்தார். அவருடைய பசியைக் காலந் தாழ்த்தாது ஆற்ற வேண்டுமென்று சோறு சமைத்து மாங்கனிகளில் ஒன்றை வைத்து அமுது படைத்தார். அமுதுண்ட அடியார் பசி நீங்கிச் சென்றார். பரமதத்தன் பகல் உணவு கொள்ள வந்தார். நீராடிய பின் உணவு உண்ண அமர்ந்தார். அம்மையார் அமுது படைக்கும்போது மிகுதியாயுள்ள மாங்கனியை வைத்தார். உண்ட பரமதத்தன் 'இது மிக இனிமையாக இருக்கிறது மற்றொரு மாங்கனியை இடு' என்றார். உள்ளே செல்வார் போற் சென்று இறைவனை வேண்ட ஒரு மாங்கனி கிடைத்தது. அதை இலையிற் படைத்தார். அதனைச் சுவைத்து உண்ட பரமதத்தன் "எங்குமில்லாத அதிமதுரக் கனி எங்கு பெற்றாய்" என்று கேட்டார். புனிதவதியார் நடந்ததைச் சொன்னார். 'ஈசனருளால் பெற்றதனால் இன்னுமோர் கனி பெற்றுக் கொடு'' என்றார் பரமதத்தன். தம் சொல் பொய்த்துவிடக் கூடாதென்றெண்ணிய புனிதவதியார் இறைவனை வேண்டினார். ஒரு கனி அவர் கையில் வந்தது. அதைப் பரமதத்தனிடம் கொடுக்க அது மாயமாய் மறைந்தது. அவ்வளவில் பரமதத்தன் தம்மனைவி தெய்வப் பெண் என்று கருதிச் சில நாள் அங்கு வதிந்தார். இதை யாரிடமும் சொல்லவில்லை. வாணிபத்திற்காக வெளியூர் செல்வதாகச் சொல்லிக் கப்பலேறிச் சென்று பாண்டிய நாட்டில் ஒரு நகருக்குச் சென்று வணிகம் நடத்திப் பெரும் பொருள் ஈட்டினார். அங்கேயே ஒரு வணிகரின் பெண்ணை மணந்தார். அவர்களுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது. முன்னை மனைவியின் தெய்வத் தன்மையின் நினைவாக அப்பெண் குழந்தைக்குப் புனிதவதி என்ற பெயரையே சூட்டினார். ஈதிங்ஙன மிருக்க, பரமதத்தன் பாண்டிய நாட்டிலிருப்பதைச் சில வணிகர் மூலமாகக் காரைக்காலிலுள்ள தனதத்தர் கேட்டுத் தெரிந்து கொண்டார். தம்பெண்ணை அவர் கணவருடன் சேர்ப்பதே முறையென்றெண்ணி,

கு. கலியாணம், எம்.ஏ., டிப்.எக்கான்.

கடவுள் கண்ணுல் காட்டப்படும் அல்லது காணப்படும் பொருள் அல்ல. அது உணர்வுப் பொருள். மனிதனுக்குக் கண் தான் சிறந்த உறுப்பு அல்ல; அவனது சிந்தனேயே உயர்ந்தது. அந்த உணர்வில் எழும் சிந்தனேயாலே யே மனிதன் கடவுளேக் காண முடியும். இறை வுணர்வே இல்லாதவர்கள் தான் கடவுளே இல்லே யென்கிருர்கள். எதற்கும் அவனருள் வேண்டுமல்லவா!

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

சிவிகையில் ஏற்றிச் சுற்றத்தார் சிலருடன் பாண்டிய நாட்டிற்கு அனுப்பிவைத்தார். அந்த நகரையடைந்ததும் சுற்றத்தார் தங்கள் வரவினே பரமதத்தனுக்குச் சொல்லி யனுப்பினர். அவரும் தம் மனேவி குழந்தை யுடன் வந்து புனிதவதியாரை அடிபணிந்து வணங்கினர். அம்மையார் அச்சத்துடன் ஒதுங்கி நின்ருர். 'நீர் இப்படிச் செய்ததற்கு என்ன காரணம்' என்று உறவினர் வினவினர், பரமதத்தன் இப்பெண்மானுடர் அன்று தெய்வ மங்கை; ஆகவே நான் வணங்கினேன்; நீங்களும் வணங்குங்கள்" என்ருர். இதைக் கேட்ட அம்மையார் "இவருக்காகத் தாங்கி யிருந்த எழிலுடைய உடம்பு பேய் வடிவமாக வேண்டும்." என்று இறைவனே வேண்டினர். அவ்வாறே யாயிற்று. அங்கிருந்து கைலாசத்தை நோக்கிப் புறப்பட்டார் வட நாடெல்லாம் கடந்து கயிலே மலேச்சாரலே யடைந்தார். இறைவன் எழுந்தருளியிருப்ப தால் அதைக் காலால் மிதிக்க அஞ்சித் தலே யில் நடந்து வெள்ளியங்கிரியின் மேல் ஏறிச் சென்ருர் இதைக் கண்ணுற்ற உமாதேவியார் "எம்பெருமானே! இந்த எலும்புக் கூட்டின் அன்புதான் என்னே!" என்று கூறவும் சிவ பெருமானும் "இவள் நம்மைப்பேணும் அம்மை காண்" என்ருர். அருகேயடைந்த புனிதவதி யாரை "அம்மை!" என்று அழைக்க அவரும் "அப்பா!" எனக் கூறிப் பணிந்தார். வேண்டுவது யாதென்ருர் வெள்ளியங்கிரி வள்ளல். அம்மையார் "எனக்கு பிறப்பு வேண்டாம். பிறந்தால் உம்மை மறவாமை வேண்டும். இன்னும் நீ ஆடும்போது உன் திருவடியின் கீழ் இருக்க வேண்டும்" என வேண்டினர். இறைவனும் "நீ திருவாலங்காட்டிற்குச் சென்று நம் நடனம் கண்டு திருவடியின் கீழ் இன்பமார்ந்திருக்க" என்று திருவருள் புரிந்தார். அப்படியே திருவாலங்காட்டை யடைந்து இறைவன் திருநடனம் கண்டு பேரின்பப் பெருவாழ்வு பெற்ருர்.

காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி திருஆலங்காட்டு மூத்ததிருப்பதிகங்கள், திரு இரட்டை மணிமாலே ஆகிய தோத்திரப் பாடல்களே அருளியிருக்கின்ருர். இந்த பதிகங்கள் பதினேராம திருமுறையில் முதலிலுள்ள திருவாலவாயண்ணலின் திருமுகப் பாசுரத்தை அடுத்து அமைக்கப் பெற்றுள்ள சிறப்புடையன. இவை மூவர் தேவாரத்துக்கு காலத்தால் முற்பட்டதென்பது அறிஞர்கள் கண்ட முடிவு. அதனுலேதான் மூத்த திருப் பதிகங்கள் என்ற பெயரும் எழுந்தது. காரைக்காலம்மையார் கி. பி. ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்து. அம்மையார் தம்மைக் "காரைக்காற்பேய்" என்றே கூறிக் கொள்கிருர். சுந்தரர் திருத்தொண்டத் தொகையில் "பேயார்க்கும் அடியேன்" என்று கூறுகிருர். அம்மையார் "அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள் அப்பன் இடம் திருஆலங் காடே" என்று பாடுகிருர். திருவாலங் காட்டுக் கோயில் கல்வெட்டுகளிலும், சேக்கிழார் பெரியபுரணத்திலும் "அண்டமுற நிமிர்ந்தாடிய பிரான்" என்ற சொல்லே ஆண்டிருப்பது கண்டு மகிழத்தக்கது.

இராக்கத ஆண்டு பங்குனித் திங்கள் 6-ஆம் நாள் (19-3-76) அன்று காரைக்காலம்மையார் திருநட்சத்திரத்தை யொட்டி இக்கட்டுரை வெளிவருகிறது.

கடவுளே வணங்குவது அவனுக்குத் தொண்டு செய்ய அல்ல; "மனிதனுக்குத் தொண்டு செய்ய எனக்கு வலிமையைத் தா". என்று கேட்க. மாபாரதத்தில் கன்னன்கூடக் கண்ணனிடம், "இல்லேயென்று இரப்போர்க்கு இல்லேயெனு இதயம் தா" என்றுதான் கேட்டான்.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

# வண்புகழ் நாரணன்

அக்னிஹோத்ரம் ராமாநுஜாசாரியர்

எண் பெருக்கந்நலத்து !
ஒண்பொருளீறில !
வண் புகழ் நாரணன் !
திண்கழல் சேரே !!

இந்தப் பாட்டு தமிழ் மொழியில் அமைந்துள்ள திருமந்திரம் (அஷ்டாக்ஷரம்) எம்பெருமானுடைய சொரு பாதிகளை அனுசந்தானம் செய்ய இந்தப் பாட்டு ஒரு கருவியாக அமைந்துள்ளதால் இது திருமந்திரத்தின் இடத்தைப் பெறுகிறது. திருமந்திரத்தில் நாரணன் என்ற சொல் காணப்படுகிறது. ஆனல் சொல்லின் பொருள்கள் காணப்படவில்லை. இந்தப் பாட்டில் பொருளும் சொல்லும் ஒருங்கே இடம் பெறுவதால் இதற்கு தனித்த பெருமை உண்டு. நாராயணனுடைய திருவடிகளை அடையுங்கள் என்று கூறுகிருர்.

நாராயணன் என்ற சொல் இங்கு மிகவும் முக்கியமானதாக விளங்குகிறது. இது வடமொழி சொல்லானதால் பல விதமாக இதற்கு விளக்கம் கூறப்படுகிறது. இவைகளுள் உலகம் அடையுமிடம், உலகத்தில் இருப்பவன் என்ற இரண்டு பொருள்கள் மிகவும் முக்கியமானவை. உலகம் என்பது அறிவுள்ள ஆன்மவர்க்கத்தையும் அறிவில்லாத பொருள்களையும் கூறும். இவை இரண்டும் கடவுளிடமிருந்தே வருகின்றன. கடவுளையே முடிவில் அடைகின்றன என்பதுதான் சுருக்கமான பொருள். படைப்பு மூலமாகவோ, பரிணமத்தை அடைவது மூலமாகவோ கடவுளிடமிருந்து . உலகம் உண்டாவது திண்ணம். அவனிடத்திலிருந்து உண்டாகியிருப்பதால் முடிவில் அவனேயே இவை அடைகின்றன. படைப்பிற்குப் பிறகு ஒவ்வொரு பொருளிலும் எம்பெருமான் இருந்து வருகிருன். அந்தந்த வஸ்துக்கள் உருக்குலைந்து அழிந்த பிறகு அவனிடத்திலேயே முடிகின்றன. நாராயணன் என்ற சொல் இயற்கைக்கு அப்பாலுள்ள கடவுள் தத்துவத்தையும், உலகத்தையும் இணைப்பது. சுசேதனமான உலகமும் கடவுளிடமுள்ள சூக்குமமான பிரகிருதியிடமிருந்து பரிணமத்தை அடைவதால் அசேதன பிரபஞ்சமும் கடவுளோடு இணைபட்டதாகும். அவ்விதமே சேதனமான ஆன்மவர்க்கங்களும் அவனிடமிருந்து பிரிந்து வந்திருப்பதால் முடிவில் அவனையே அடைகின்றன. சுசேதனப் பிரபஞ்சத்திற்கு மூலமாக சூக்குமமான அசேதனம் எம்பெருமானிடம் இருந்து வருவதாக சிலர் கூறுவர். மற்றும் சிலர் அறிவு வடிவான கடவுளிடத்தில் சுசேதமான, இயற்கை இருக்க நியாயமில்லை. ஆதலால் எம்பெருமான் தானே அசேதனமான பிரபஞ்சமாக ஆகி நான், என்று கூறுகிருர்கள். மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் காலத்தில் இயற்கை ஜடமாகத் தோன்றினுலும், ஆழ்ந்து கவனித்தால் அங்கும் அறிவுவடிவான கடவுளின் அம்சந்தான் முடிவாக நிற்கிறது. ஆன்ம வர்க்கமும் அறிவுவடிவாக இருந்தாலும் தன்னைக் கடவுளிடமிருந்து தனிப்படுத்தி நினைப்பது பிறவிக்குக் காரணமாகிறது. மனிதவர்க்கம்

வாழ்க்கையில் சுக துக்கங்களை அனுபவிப்பதற்கு அடிப்படையாக நிற்பது அக்ஞானம். இந்த அக்ஞானம் ஆன்மவர்க்கத்தையும், இயற்கையையும் சுதந்திரயாக நினைத்து கடவுளை மறந்து விடுவதைத் தவிர வேறு இல்லை இரண்டையும் கடவுளோடு இணைத்து நினைத்தால் அக்ஞானம் போகும். முக்தி கிடைக்கும். கடவுள் என்ற சொல் நாராயணனுடைய சொல்லின் மொழி பெயர்ப்பாகவே காணப்படுகிறது. கடந்தும் நிற்கிறன். உள்ளிலும் இருந்து வருகிறன்.

கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள உறவை தூய தத்துவ நிலையிலிருந்து கவனிப்பது ஒருவகை. அதன்படி உலகம் அவனிடமிருந்து வந்தது. முடிவில் அவனையே அடையும் என்ற கருத்துதான் முடிவாக நிற்கிறது. ஆனால், அறிவுள்ள ஆன்மவர்க்கங்கள் ஏன் கடவுளிடமிருந்து பிரிந்தன. ஏன் அவனை அடையவேணும் என்ற கேள்விகள் பிறக்கும் காலத்தில் மனதில் உலக இயற்கையைப் பின்பற்றி பல கருத்துக்கள் உதயமாகின்றன. அறிவில்லாத இயற்கைக்கு இந்தக் கவலை கிடையாது. ஆன்மவர்க்கம் கடவுளிடமிருந்து பிரிந்ததால் கஷ்டங்களை அனுபவிக்கிறது என்ற அடிப்படையில கடவுளை அடையும் வழி என்ன என்று கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. கடவுளையும் ஆன்மவர்க்கத்தையும் பிரித்தது அக்ஞானம். "நான் வேறு" "கடவுள் வேறு" என்று நினைக்கிறன். கடவுளோடு உறவுள்ளவன் என்று நினைத்தால் முக்தியை அடைந்து விடலாம் கடவுளை ஏன் அடைய வேணும் என்ற கேள்விக்குச் சுலபமாகப் பதில் கூறிவிடலாம். அங்கிருந்து வந்தான், மறுபடியும் வந்த இடத்திற்குத் திரும்புகிறன் என்று. இந்தக் கொள்கை வரட்டு வேதாந்தத்திலேயே நிற்கிறது. மனிதப் பண்பாடோடு கவனிக்கமுடியவில்லை. மனிதப் பண்பாடோடு கவனிக்கும் காலத்தில் இதுதனி உருவைப் பெறுகிறது. மனிதன் இன்று வாழ்ந்து வரும் உலகத்தை விட்டு தான் கடவுளை அடைவான். அப்பொழுது கடவுளையும் உலகத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும் காலத்தில் உலகத்திலில்லாத பெருமைகள் கடவுளிடம் இருக்கிறது என்று காண்பித்தால்தான் வாழ்க்கையை விட்டு, கடவுளையே அடைய நினைப்பான். உலகத்திலுள்ள குறைபாடுகள் கடவுளிடமில்லை என்பது இயற்கை அடிப்படையிலேயே நிற்பது. அவ்விதமே கடவுளை மனித இயற்கையோடு இணைக்கும் காலத்தில் மனித குணங்களைக் கொண்டுதான் கடவுளையும் மதிப்பிட வேண்டுகிறது. உலக வாழ்க்கையில் குணமுள்ள ஒருவரை நாம் விரும்புகிறோம். குணமில்லாதவனைக் கண்டு விலகுகிறோம். இந்த நிலையில் கடவுளிடம் குணங்கள் தேவைப்படுகின்றன. மனிதனிடத்தில் கெட்ட குணங்களும் சேர்ந்திருப்பதால் கடவுளை விரும்புகிறவர்கள் கெட்ட குணங்களின் கலப்பில்லாத நற்குணங்களுள்ள கடவுளையே விரும்புகிறர்கள். மனிதனிடமுள்ள நல்ல குணங்களுக்கு எல்லையுமுண்டு எண்ணிக்கையுமுண்டு. கடவுளிடமுள்ள குணங்களுக்கு எண்ணிக்கையும் இல்லை. எல்லையுமில்லை. கடவுளிடமுள்ள குணங்கள் கணக்கற்றவை. ஒவ்வொரு குணங்களும் எல்லையற்றவைகளாக இருந்து வருகின்றன. கடவுள்எல்லையற்றவன் ஆதலால் அவனுடைய குணங்களுக்கும் எல்லை கிடையாது. பக்தர்கள் குணங்களில் ஈடுபட்டு பேசியனுபவித்தாலும் முடிவில் கடவுளின் குணங்களைக் கணக்கிட முடியவில்லை என்று கூறுகிறர்.

அவரவர்கள் அந்தந்தக் குணங்களின் மூலம் கரைகாணமுடியாமல் நிற்கிருர்கள். நாராயணன் என்ற சொல்லில் சில குணங்களை முக்கியமாகக் கொண்டு முடிவில் எல்லாக் குணங்களையும் உள் கொண்டு விடுவதால் எம்பெருமானைக் குறிப்பிடும் காலத்தில் எண்பெருக்கு அந்நலத்து என்று எண்ண எண்ண பெருகிக் கொண்டே போகும் குணங் கள் என்று ஆழ்வார் குறிப்பிடுகிருர். ஒண்பொருள் என்ற சொற்ருெடரும் கடவுளுக்கு அடைமொழியே. எப்பொழு தும் விளங்குபவன் தான்; பிரகாசத் தோடு மட்டுமில்லாமல் மற்றவைகளை யும் விளங்கச் செய்பவன். விளக்கின் ஒளி தன்னையும் காண்பிக்கிறது. மற்றவைகளையும் காண்பிக்கிறது. ஈறு இலவன் புகழ் என்ற சொற்ருெடரும் நாராயணன் என்ற சொல்லுக்கு அடை மொழியே. இங்கு நாராயணனின் அளவிலாத தொன்மை மிகுந்த புகழ் சொல்லப்படுகிறது. கடவுளிடம் குணங் கள் இருந்தாலும் அவை செய்கையில் பயன்பட்டு, புகழை உண்டாக்க வேண்டும். புகழில்லாதவனை யாரும் அடைய விரும்பமாட்டார்கள். புகழ் குணங்களை விளக்குமிடம். புகழும் தொன்மை வாய்ந்ததாக இருந்தால் நம்பிக்கையை ஊட்டும். புதிதான புகழுள்ளவனை நம்பமாட்டார்கள்.

திண்கழல் என்ற சொற்ருெடர் நாராயணனின் கழல்களில் உறுதியான நிலையைக் குறிப்பிடுகிறது. தானும் ஸ்திரமாக இருந்துகொண்டு அண்டின வர்களுக்கும் நித்யமான வைகுந்தத்தைக் கொடுக்கும் கழல். உலகத்தைத் தாங்கும் எம்பெருமானைத் தாங்க திருட மாக இருப்பது குறிப்பிடப்படுகிறது என்றும் கொள்ளலாம்.

கணக்கற்ற நற்குணங்களுடைய வனரையும் எப்பொழுதுமே பிரகாசித்துக் கொண்டிருப்பனுயும், அளவில்லாத தொன்மை நிறைந்த புகழை உடைய வனுயுமுள்ள நாராயணன் கழல்களை அடையுங்கள் என்று கூறுகிருர்.

# போற்றி யகவல்

பாரதியார்



போற்றி உலகொரு மூன்றையும் புணர்ப்பாய்
மாற்றுவாய், துடைப்பாய், வளர்ப்பாய், காப்பாய்!
கனியிலே சுவையும் காற்றிலே யியக்கமும்
கலந்தாற் போலநீ அனைத்திலும் கலந்தாய்
உலகெலாந் தானு யொளிர்வாய், போற்றி
அன்னை போற்றி, அமுதமே, போற்றி
புதியதிற் புதுமையாய், முதியதில் முதுமையாய்,
உயிரிலே யுயிராய், இறப்பிலு முயிராய்
உண்டெனும் பொருளி லுண்மையாய், என்னுளே
நானெனும் பொருளாய், நானையே பெருக்கித்
தானென மாற்றுஞ் சாகாச் சுடராய்,
கவலைநோய் தீர்க்கு மருந்தின் கடலாய்,
பிணியிருள் கெடுக்கும் பேரொளி ஞாயிறாய்,
யானென தின்றி யிருக்குநல் யோகியர்
ஞானமா மகுட நடுத்திகழ் மணியாய்,
செய்கையாய், ஊக்கமாய், சித்தமாய், அறிவாய்
நின்றிடுந் தாயே, நித்தமும் போற்றி
இன்பங் கேட்டேன், ஈவாய் போற்றி
துன்பம் வேண்டேன், துடைப்பாய் போற்றி
அமுதங் கேட்டேன் அளிப்பாய் போற்றி
சக்தி, போற்றி, தாயே, போற்றி,
முக்தி, போற்றி, மோனமே, போற்றி
சாவினை வேண்டேன், தவிர்ப்பாய் போற்றி

# கோயிலும் குடிசையும்

பெ. சுப்பிரமணியன் எம்.ஏ.

1952ல் ஒலித்தது ஒரு குரல்!

''கோயிலுக்கும் குடிசைக்கும் உள்ள இடைவெளி குறையவேண்டும்; கோயிலுக்கும் குடிசைக்கும் என்றும் பிரியாத இணைந்த உறவு வேண்டும்; கோயிலைக் குடிசை உரிமை கொள்ள வேண்டும்; குடிசையைக் கோயில் அரவணைக்க வேண்டும்''.

—இது தமிழகத்தின் பட்டிதொட்டியெல்லாம் சென்று ஓயாது சிந்தனையுணர்வூட்டித் தமிழனத்தைச் செழுமைப்படுத்தி வரும் குருமணியின்குரல்! அறுமுகச் செவ்வேள் அணிதிகழ்ந்தருளும் குன்றக்குடியின் குருமணியாகி இருபத்தைந்தாண்டுகளாகத் தமிழ் நிலம் முழுதும் குரலெழுப்பி வரும் அருள்நெறித்தந்தை அடிகளார் அவர்களின் கருத்து மணி! இதுபோன்று எத்துணையோ கருத்து மணிகளைத் தம் சிந்தனைக் கழனியில் விளைத்து அளித்து வரும் அடிகளார் அவர்களுக்கு இருகரம் போதா; அவர்தம் உழைப்பிற்கு ஆயிரம் கரங்கள் வேண்டும். அவர்தம் உழைப்பின் பயனை மனிதகுலம் துய்ப்பதற்கு இன்னும் ஆயிரக்கணக்கான தமிழர்கள் உழைக்க வேண்டும்; தோள் கொடுக்க வேண்டும்; அவர்–தம் கருத்துக்களை உணர்ந்து தெளிந்து செயல் வடிவம் தரவேண்டும்; வாழ்வில் நடைமுறைப்படுத்த வேண்டும். தவத்திரு. அடிகளார் அவர்கள் கோயில் குடிகளைத் தழுவியதாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்கள். இக்கருத்தைப் புரிந்துகொண்ட தமிழர் மிகுதியாக இல்லை. இக்கருத்து தமிழரிடை இன்று வெற்றிபெற்று வருகிறது. அடிகளார் அவர்களின் அயரா உழைப்பால் இக்கருத்து இன்று மக்களிடையில் பரவி, ஓங்கி உயர்வுபெற்று வருகிறது; உறுதியாக இக்கருத்து வெற்றி பெறும் என்ற நம்பிக்கை இன்று உறுதிபெற்ற தமிழரிடை நிலவி வருகிறது.

வான்முட்டி மதி தழுவும் திருக்கோயில்கள் எண்ணிலாதன தமிழ்நிலத்தில் உள்ளன. கள் கோயில்கள் மனிதவாழ்வினைத் தூய்மைப் படுத்தி மனிதரை அருளனுபவம் வாய்த்தவர்களாக்கத் தோன்றின. நம்முன்னோர் நமக்காகவே கோயில் எழுப்பினர்; இறை வழிபாட்டினை மேற்கொண்டனர். ஆனால் நோக்கம் முற்றிலும் தடம்புரண்டது; திருக்கோயில் வழிபாடு ஏதோ பயன் நோக்கிச் செய்யப்படுவதாகவும், அங்கு தரகர் முறையில் சிலரை அமர்த்தி அவர்களைப் பிழைக்க வைக்கின்ற தொழில்முறைக் கூடங்களாகவும் மாறத் தொடங்கின. மக்களுக்காகக் கோயில் என்ற நிலைமாறி கோயிலுக்காக ஒருசிலர் என்ற நிலையேற்பட்டது. இந்தநிலை ஏற்பட்ட காலத்தில் தான் திருக்கோயிலினிடத்தில் மனிதனுக்கு இருந்த உரிமை நிலைமாறி உதிரி நிலையேற்பட்டது. திருக்கோயில்கள் ஒருமைப்பாட்டின் சின்னமாக விளங்கிய நிலை மாறியது; 'தொண்டக்குலம்'–'அடியார் திருக்கூட்டம்' என்ற ஒரே குலம் பல சாதிப் பிரிவாக மாறியது. திருக்கோயில்கள் பொருள் நிறைந்தவர்க்கே உரிமையாயின; மேல் தட்டிலிருப்பவர்க்கே சொந்தமாயின! சமுதாயத்தின் அடித்தட்டிலிருப்பவர்களுக்கும் கோயில்களுக்கும் உறவு அற்றது. கோயில், சமயம், வழிபாடு இவற்றை நினைந்துகூடப் பாராமல் அடித்தட்டிலிருந்த மக்கள் இருந்தனர்; இன்றும் பலர் இருந்து வருகின்றனர்.

ஏழைத் தொழும்பர்க்கு இரங்கியருள் செய்கின்ற பெருமான், மனிதன் பிரிவு மனம் கொண்டு, கோயிலை ஒதுக்கிய காலத்தும், கோயில் மேட்டுக் குடியினரால் கீழிருந்தவர்களை விட்டுப்பிரிந்த காலத்தும் தானே எளிவந்து ஆட்கொண்டருளி அறிவுறுத்தினன். கோயிலில் கல்லாக இல்லாமல் கோயிலை விட்டு வெளிவந்து மனிதனின் உள்ளக் கோயிலில் குடிபுகுதலையே பெரிதும் விரும்பினன். மனிதரிடை இருக்கின்ற வேறுபாட்டுணர்ச்சிகளை நீக்கவே மண்ணகம் வந்தான். உயர்குடிப் பிறந்தாரையும் தாழ் குடிப் பிறந்தாரையும் நட்புறவு கொள்ள

வைத்து ஒத்த உரிமையும் உணர்வும் ஏற்படுத்திஞன். வேளாளர் குலத்துள் தோன்றிய அப்பரடிகளும் அந்தணர் குலத்துத் தோன்றிய அப்பூதியடிகளும் கொண்ட உறவும் திருஞான சம்பந்தர்-திருநீலகண்ட யாழ்ப்பாணர் உறவும் நம்மால் போற்றி ஏத்துந்தகையன..

உயர்வு தாழ்வு மனிதருக்குள் இல்லையென்பதை ஒழிக்கவே வான்பழித்து இம் மண்புகுந்தான் பெருமான். மனிதனுக்கு மனிதன் ஒத்துணர்வுடன் வாழ வேண்டும் என்பதை நாம் உணரவே இறைவன் அடியார் திறந்து அருளிக் காட்டினுன். இறைவன் தொண்டர் உள்ளத்தையே தம் இருக்கையாக உவந்து ஏற்ருன். தொண்டர்தம் அன்பினையே வேண்டினுன். அன்பு வைத்த தொண்டர்க்கு அடியவனுக, பணியாளனுக இறைவன் வந்து தொண்டு செய்தான். சுந்தரர்க்காகத் தூது சென்ருன். அவர் வேண்டியன வெல்லாம் செய்தான்; மதுரையில் விறகு விற்ருன்; பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்தான்; கரிக்குருவிக்கு மறை யருளினுன்; வந்திக்குப் பணியாளாக வந்து மண் சுமந்து பிரம்படியும் பட்டான். மணிவாசகப் பெருமான்

"இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதம் தந்தருளுஞ்
சேவகனை"

என்ருர். அடியார்க்கு அருள்புரிய இல்லந் தோறும் எழுந்தருளினுன். அடியவரை நாடி இறைவன் வந்தருளிய திறத்தினை நம் திருக்கோயில்கள் திருமடங்கள் உணர வேண்டும் என்பதுதான் இன்று நம் பணிவான வேண்டுகோள். தவத்திரு அடிகளார் அவர்களும் இக்கருத்தையே வலியுறுத்தி வருகின்ருர்கள். நம் சமய நிறுவனங்கள் எளியர்க்கிரங்கி தொண்டு செய்ய வேண்டும். மேல் தட்டிலிருப்பவர்கள் பத்திமை யுடையவர்களாக இருப்பவர்கள்; கீழ்த் தட்டிலிருப்பவர்கள் அறியாமையால் மறைக்கப்பட்டிருப்பவர்கள். கோயில் குடிசையை அலட்சியம் செய்து, கவனியாது இருக்கும் நிலையை உருவாக்கக்கூடாது. அந்த நிலை வராமற்காப்பது நம்கடமை. கோயில்கள் திருமடங்கள் மனிதனின் உள்ளத்தில் ஆன்ம வித்தை விதைத்து அவன் உள்ளக் கழனியில் ஆன்மப் பயிரை வளர்க்க வேண்டும். கோயில் கள்-மடங்கள் குடிமக்களைத் தழுவிச் செல்ல வேண்டும்; குடிகளை வளர்த்துத் தாமும் வளர வேண்டும். மூவேந்தர் காலத்தில் திருக்கோயில் சமுதாய மையமாக, பணிமனைகளாக விளங்கின. சென்ற காலத்தில் விளங்கிய உயர்ந்தநிலை மீண்டும் வரவேண்டு மென்பது பேரவைத் தொண்டர்தம் விருப்பம்.

காலத்தினுல் இந்து சமயத்திற்குக் கிடைத்த பெரும்பரிசே நமது தெய்விகப் பேரவை என்ற பேரமைப்பு. திருக்கோயில், திருமடங்கள் பேரவை அமைப்பை மக்கள் இயக்கமாக மாற்ற ஒத்துழைக்க வேண்டும். மக்கள் வாழ்வுக்காகச் சமயம் என்ற நிலை வரவேண்டும்; வளர வேண்டும். தமிழகத்தில் எல்லாச் சிற்றூர்களிலும் பேரவை இயக்கம் இருக்க வேண்டும். அந்தந்த ஊரில் பேரவை பணி மையமாக (service centre) இருந்து தொண்டாற்ற வேண்டும். அவ்வகையில் பணி மையங்களாகத் தொண்டாற்றி வந்தால் அந்தந்த ஊரினையும் ஆட்சி செய்யும் பொறுப்பும் பேரவைத் தொண்டரிடத்தில் தாமே வரும்; மக்கள் பேரவைத் தொண்டர்தம் தொண்டின் உயர்வு நோக்கி ஊராளும் பொறுப்பை அவ்வூர்ப் பேரவையினிடம் தாமே விரும்பியளிப்பர். பேரவையின் உயர்வு தாழ்வென்ற வேறுபட்ட நிலைவராது பார்த்துக் கொள்ள வேண்டியது பேரவைத் தொண்டர்தம் கடனுகும். இந்துவாகப் பிறந்த குடிமகன் ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கைக்குரிய பாதுகாப்பு இந்து சமய அமைப்பால் வழங்கப்பட வேண்டும். இந்துவாகப் பிறந்த ஒருவன் அனுதையாக இருக்கிருன் என்ற நிலை மாறவேண்டும். பேரவையைச் சார்ந்த தலைவர்கள் இயக்கத்திலுள்ள இறுதித் தொண்டன் வரை உறவு கொள்ள வேண்டும். இன்ப துன்ப நிகழ்வுகளில் பங்கு கொள்ள வேண்டும்.

பொருளுடையவர்கள் இல்லாதவர்களுக்கு வழங்கியுதவ வேண்டும். 'செல்வத்துப் பயனே ஈதல்' என்ற புறநானூற்றுப் பொருளியல் கோட்பாட்டினைப் பேரவையிலிருக்கும் பொருளுடையவர்கள் கைக்கொள்ள வேண்டும். உரிமைகளை மனிதன் கேட்டுப் பெறுவது

நன்றன்று; மற்றவன் உரிமைகளை மறுத்து, தாமே முடக்கி வைத்திருக்கின்ற மனிதர் உரிமை இல்லாதவர்க்குத் தாமே முன்வந்து விரும்பி வழங்க வேண்டும். இல்லையென்றால் ஒடுக்கப்பட்டவர்கள் என்றாவது ஒருநாள் விழித்துக் கொண்டு, முடக்கி வைத்திருப் பவரிடமிருந்து முற்றாகப் பறித்துவிடும் நிலை யேற்படும். இந்த நிலை ஏற்படுவது நன்றன்று. இவ்வாறு ஏற்படாதவாறு பொருளுடைய பேரவை உறுப்பினர்கள் எளியர்க்கு உதவ வேண்டும். கோயில்கள், மடங்கள் வேண்டா மென்ற வெறுப்புணர்வில் எழுதுவதில்லை. நம் சமய நிறுவனங்கள் நம்மால் காக்கப்பட வேண்டும் என்ற விருப்பத்தாலேயே இவ் வேண்டுகோளை எழுதியுள்ளேன். சமய நிறுவனங்கள் தோன்றிய நோக்கங்களின் அடிப்படையில் பணிசெய்ய வேண்டும். மேல் தட்டிலிருப்பவர்கள் தாழ்ந்து விடவேண்டும் என்று பொருளில்லை; மேலிருப்பவர்கள் கீழிருப்பவர்களைக் கைதூக்கி உயர்த்திவிட வேண்டுமென்பதே நோக்கம்.

பேரவைக் கிளைச்சங்கங்களின் உறுப்பினர் கள் ஒவ்வொரு கிளையினரும். அக்கிளையுறுப் பினர்கள் ஒவ்வொருவரின் வாழ்வொடு பிணைந்திருந்து இன்ப துன்பங்களில் பங்குபெற வேண்டும். ஒருவரைப் பற்றி மற்றொருவர் அக்கறையும் ஆர்வமும் கொள்ள வேண்டும். ஒருவருக்கு ஒருவர் உதவி செய்யும் உயர்ந்த மனப்பான்மை வளர வேண்டும். கிளைப் பேரவையைச் சேர்ந்த உறுப்பினர் ஒருவர் சமுதாயப்பணிக்கு அல்லது வழிபாட்டிற்கு வரவில்லையென்றால் அப்பேரவைத் தலைவர் முதலிய பொறுப்பாளர்கள் அவ்வுறுப்பினரின் வீட்டிற்குச் சென்று அவர் இசையும்வண்ணம் எடுத்துக்கூறி அவ்வுறுப்பினரை அழைத்துப் பணியில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். ஒதுக்கும் மனப்பான்மையும் ஒதுங்கும் மனப் பான்மையும் நம்மிடம் தலைகாட்டக் கூடாது.

கோயிலைப் பேணிக்காக்கும் பொறுப்பு குடி மக்களிடம் இருக்கவேண்டும். குடிமக்களை, கல்வியாளராக, கலைஞராக, அறிஞராக, ஞானானுபவம் உள்ளவராக செம்மை யிற் சிறந்த வாழ்க்கையுடையவராக வளர்க்க வேண்டிய பணி திருக்கோயிலுக்கு இருக்க வேண்டும். திருமடங்களும் இவ்வகை யில் பணியாற்றவேண்டும். குடிமகன் எந்த விதத்திலும் தொல்லையுறாதவண்ணம் கோயில் கள், மடங்கள் பாதுகாப்பளிக்க வேண்டும். கோயிலின் சிறந்த பணிகளுக்கு ஊறு நேராத வண்ணம் ஒவ்வொரு குடிமகனும் பொறுப் பேற்றுக் கொள்ள வேண்டும். கோயிலும் குடிசையும் ஒன்றை யொன்று தழுவியிருக்க வேண்டும். கோயிலின் பணிகளில் குடிமகன் உரிமை கொள்ள வேண்டும். குடிசையைக் கோயில் காக்க வேண்டும். இவ்வுயரிய ஒப்பற்ற நோக்கத்திற்காகப் பேரவை உறுப்பினர் ஒவ்வொருவரும் உறுதியெடுத்துக் கொண்டு உழைக்க வேண்டும். அப்போதுதான் இரண்டிற்கும் உறவுநிலை வளரும். உயர்ந்த சமுதாயம் அமையும். இக்கருத்தை நம் உள்ளத்தில் ஏற்று தவத்திரு அடிகளார் அவர் களின் அருள்நெறியின் வழியில் அயராது உழைப்போம்! அருள்வழிப்பட்ட சமுதாயம் காண்போம்!

---

# STATEMENT ABOUT OWNERSHIP AND OTHER PARTICULARS ABOUT ARULOSAI

FORM IV (See Rule 8)

| | |
|---|---|
| 1. Place of Publication | 9, Maharaja Surya Rao Road, Madras-600018 |
| 2. Periodicity of its Publication | Monthly |
| 3. Printer's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| 4. Publisher's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| 5. Editor's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | Tamil Nadu Deivika Peravai 9, Maharaja Surya Rao Road Madras-600018 |

I, A. Narayanaswami hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*Date* 28—2—76

(Sd) A. Narayanaswami,
*Publisher.*



13. கொன்றன்ன இன்ன செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும். 109.

முன்பு உதவிய ஒருவர், தமக்குக் கொலையினை ஒத்த துன்பம் செய்தாராயினும், அவர் முன்பு செய்த ஒரு நன்மையினை எண்ணும் பொழுது பின் செய்த அக்கொடுந் துன்பம் கெடும்.

பொருள் :

பழகிய ஒருவர் இன்று கொலையினை ஒத்த துன்பம் செய்தாலும், அவருக்கு எதிர்த்துன்பம் தராமல் அவர் முன்னொருகால் செய்த நன்மையினை எண்ணி அமைக! அவ்வழி, நன்றி மறத்தல் என்னும் குற்றம் வராதிருக்கும். எதிர்த்துன்பம் செய்யாமையால் அவரும் மனம் மாறித் துன்பம் செய்தலைத் தவிர்ப்பர்.

14. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந் [தொரு பால்
கோடாமை சான்றோர்க் கணி. 118.

நிறுவைக்கு முன் சமநிலையில் நின்று, பொருள்களை இட்டு நிறுக்கும்பொழுது, பொருளின் அளவை வரையறுத்துக் காட்டும் துலாக்கோல் போல ஒரு பக்கமாகச் சாராமல் நடுநிற்றலே சான்றோர்க்கு அழகு.

பொருள் :

கருத்தறிவதற்கு முன்பு சமநிலையில் நின்று, இருபாலாரின் கருத்தினை அறிந்த பிறகு, அக் கருத்தின் தரத்திற்கு ஏற்ற வாறு நிற்பதே சான்றோர்க்கு அழகு. கருத்தின் தரத்தைத் தேரும்பொழுது ஒருபாற் சாய்தற்குக் காரணமாகிய இனம், மொழி, சமயம், கட்சி, சாதி, நட்பு ஆகியன வழிசார்தல் கூடாது.

15. எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. 125.

பெருமை பாராட்டிக் கொள்ளாமல் அடக்கமாக நடந்து கொள்வது எல்லார்க்குமே நல்லது; அவ்வாறு அடங்கி ஒழுகுதல் செல்வர்க்கு மேலும் ஒரு செல்வம் ஆகும்!

பொருள் :

"செல்வம் உடையம் யாம்" என்னும் செருக்கு, பெருமை பாராட்டிக் கொள்ளும் எழுச்சியைத் தரும். அவ்வெழுச்சிவழி ஆட்படின் நல்லோர் பகையும் வந்துசேரும்; வீணே புகழ்ந்து, செல்வத்தைக் கொள்ளை கொள்ளும் சிற்றினமும் வந்து சேரும். அவ்வழி செல்வம் கெடும். அதனால் செல்வமுடையவர்க்குப் பணிவுடைமை பெருஞ்செல்வமாகும்!

Printed at Peravai Achakam Edited, and Published by Sri A. Narayanaswamy, B.A., For the Tamil Nadu Deivika Peravai at No. 9, Maharaja Surya Rao Road, Alwarpet, Madras-600 018.